# தேயிலை தோட்ட புது மணம் கமழும் அப்படியே உங்கள் கோப்பைக்குள்

கண்ணன் தேவன் டீ. நறுமணம் கமழும்
உயர்தரத் தேயிலை. ஒப்பற்ற நறுமணச்
சுவையினை காற்றுப் புகாத பாலிதீன்
பைகளில் உறையிட்டுக் காக்கும்
வயிலே தோட்டத்திலேயே அடைக்கப்
பட்டு உத்தரவாதமாக அதே தரம்,
மணம் குன்றுமல் உபயோகிக்கும்
பொழுதும் கிடைத்திடும்.
சுகமான அனுபவம்.




**கண்ணன் தேவன் டீ**

daCunha/TT/180/TM



# மயிரிழையில் தப்பினார் மனோகர்

ஜுன் 2ம் தேதி காலை பத்தரை மணிக்கு அண்ணாமலை மன்றத்தில், மனோகரின் புதிய நாடகமான 'நரகாசுரன்' காலைக் காட்சி.

நரகாசுரன், ரதத்திலே ஏறி பறந்து வருவதாய் காட்சி. விளக்குகள் அணைக்கப்பட்டு விட்டன. மனோகர் முந்தின ஸீனை முடித்து விட்டு, சில விநாடிகளுக்குள்ளாக இருட்டில் ஓடி வந்து ரதத்தில் ஏறி நின்று கொள்ள வேண்டும். விளக்குகள் எரிய மேடையிலிருந்து சுமார் ஆறு அடி உயரத்தில் இருக்கும் ரதம் நகரும். மனோகர் இருட்டில் ஓடி வந்து, ரதத்தில் ஏறுகிற போது, பிடிப்புக்காக உள்ள கைப்பிடி, கையோடு வந்துவிட மனோகர் நிலை தடுமாறிப் போய், 'இரு.....இரு' என்று கயிறை இழுத்து ரதத்தை நகர்த்துபவரிடம் சொல்ல, அவரோ, 'இழு... இழு' என்று மனோகர் சொல்வதாய் நினைத்துக் கயிற்றை இழுத்துவிட்டார். அதே சமயம் விளக்குகள் ஒளி சிந்த ஆறடி உயரத்திலிருந்து மனோகர் பல்டியடித்து விழுவதை ரசிகர்களும் பார்த்தார்கள். அந்தக் காட்சி இடைவேளைக்கு முந்தின காட்சி. எனவே ஒரு ஸீன் முன்பாகவே இடைவேளை விட்டுவிட்டனர். நாடகம் பார்க்க வந்திருந்த டாக்டர் ஒருவர் மனோகரைப் பரிசோதித்து உடனே ஊசி போட்டார். வலியைப் பொறுத்துக் கொண்டு மனோகர் முழு நாடகத்தையும் நடித்து முடித்து விட்டுத்தான் வீட்டுக்குப் போனார்.

மறுநாள் அப்போலோவில் பரிசோதித்த போது, மண்டை ஓடும், முதுகெலும்பும் சேருமிடத்தில் எலும்பு முறிவு ஏற்பட்டுள்ளது கண்டுபிடிக்கப்பட்டது. "பயப்பட வேண்டிய அவசியமில்லை. ஐந்து வாரம் முழு ஓய்வு வேண்டும்" என்று சொல்லிவிட்டார்கள்.

"இப்போது ; எவ்வளவோ தேவலாம். எலும்பு முறிவு நன்றாகக் குணமாகி வருகிறது... மற்ற நாடகங்களைவிட, எதிர்பார்த்ததற்கும் அதிகமான வரவேற்பு நரகாசுரனுக்கு. திருஷ்டி என்கிறார்கள். எத்தனையோ ஆயிரம் நாடகங்கள் போட்டிருக்கிறேன். சினிமாக்களில் பயங்கரமான ஸ்டண்ட் காட்சிகளில் நடித்திருக்கிறேன். ஒரு தடவை கூட சிறு சிராய்ப்பும் ஏற்பட்டதில்லை. ஏனோ இப்போது இப்படி நடந்துவிட்டது. இதனால் என் நாடகத்துக்குத் தேதி கொடுத்த பலருக்கும் எவ்வளவு கஷ்டம். அதை நினைத்தால் தான் வருத்தமாய் இருக்கிறது. இந்த விபத்தில் என்னைக் காப்பாற்றினது அடர்த்தியான நரகாசுரனின் 'விக்'தான்! இல்லையெனில் மண்டையில் நல்ல அடிபட்டிருக்கும்! மயிரிழையில் தப்புவதில் இது ஒரு வகை" என்று சிரித்தபடி கூறும் மனோகர், மறுபடி நரகாசுரன் நாடகத்துக்கு சபாக்களுக்குத் தேதி கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்.

மௌஷ்மி.

புகைப்படம்: சபா.



மனோரா

பட்டுக்கோட்டைக்கு அருகில் இருக்கும் 'மனோரா' சுற்றுலா மையமாக ஆக்கப்படும் என்று சட்டசபையில் அமைச்சர் ஆர். எம். வீரப்பன் பேசியிருக்கிறார். மனோராவின் இன்றைய நிலை, அதன் சிறப்பு, சுற்றுலா மையமாக்கப்படுவதற்கான சாத்தியங்கள் இவற்றை அறிய — நேரில் சென்று வரத் தீர்மானித்தோம்...

# மனம் கவருமா மனோரா?

பட்டுக்கோட்டையிலிருந்து பதினாறுவது கிலோ மீட்டரில் மல்லிப்பட்டினம் என்னும் கடற்கரை கொண்ட ஊர். இந்த சிறிய ஊரின் வாழ்க்கைக்கு மீன், மீன், மீனே துணை. இங்கிருந்து ஒரு கிலோமீட்டர் தள்ளி 'மனோரா எல்லாம் இறங்குங்க' என்பார் பஸ் கண்டக்டர்.

இறங்கியதும் உப்புக் காற்று உரசும். முக்கிய சாலையிலிருந்து அதன் விலாவில் புறப்படும் மண் பாதையில் — வெயில் நாட்களாய் இருந்தால் வாக்கிங் செய்ய வேண்டும், மழை நாட்களாய் இருந்தால் சகதி மேல் ஸ்கேட்டிங் செய்ய வேண்டும்.

மனோராவை அடையும் முன் — பட்டுக்கோட்டையிலிருந்து சாலைப் பயணத்தைப் பற்றி விடுபட்டுப் போன ஒரு வரி: நிறைமாத கர்ப்பிணிகள் சுகப் பிரசவத்திற்காகவும், கிட்னியில் கல் உள்ளவர்கள் அதை வெளியேற்றுவதற்காகவும் டாக்டர்களிடம் அலைய வேண்டாம். மேற்படி சாலையில் பஸ் பயணம் செய்தாலே போதுமானது.

மண் பாதையில் வளைந்து, வளைந்து நடந்து மனோராவை அடைந்தாயிற்று. தூரமாய் நீலம் கரைக்கப்பட்ட கடல். மற்றொரு புறம் தலை விரித்தாடும் தென்னைகள். நடுவே கம்பீரமாய் மனோரா என்னும் உப்பரிகை.

மனோரா என்பது குதுப்மினார் மாடலில், பத்து மாடிகள் வைத்து, கீழே அகலமாய், மேலே போகப் போகக் குறுகலாய் அமைக்கப்பட்ட ஒரு நினைவுச் சின்னம். 1816—ஆம் வருடம் தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னர் எழுப்பியது இது. எதற்கான நினைவுச் சின்னம் இது என்கிற கேள்விக்கான பதிலில் தான் கொஞ்சம் நெருடல் இருக்கிறது.

வாட்டர்லூ என்னும் இடத்தில் நடந்த யுத்தத்தில் நெப்போலியன் போனப்பார்ட்டை பிரிட்டிஷ் ராணுவம் தோற்கடித்தது என்கிற சமாசாரம் சரித்திரம் அறிந்தவர்களுக்கு நினைவிருக்கலாம். இந்த வெற்றியில் சந்தோஷப்பட வேண்டியவர்கள் யார்? பிரிட்டிஷ்காரர்கள். தமிழர்களான நமக்கு இந்த வெற்றியில் ஏதேனும் பங்கோ, சந்தோஷமோ இருக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை. ஆனால்.. சரபோஜி மன்னர் இந்த யுத்த வெற்றியில் புல்லரித்துப் போயிருக்கிறார். ஏனென்றால் — இவர் பிரிட்டிஷ்காரர்களின் நண்பராம். எனவே மனோராவை எழுப்பினார். ஆக யாரோ, யாரையோ, எங்கோ வென்றதற்கு இங்கே நினைவுச் சின்னமாக நிற்கிறது — மனோரா.

போகட்டும், நம் கவலை, அக்கறை எல்



* மீனவர்களுக்கான வீடுகள்—மனோரா உச்சியிலிருந்து தோற்றம்

லாம் — மனோராவின் இன்றைய நிலை பற்றியே. மனோரா இப்போது தொல்பொருள் ஆராய்ச்சித்துறையின் வசம் உள்ளது. கட்டப்பட்ட அதே 1816—ல் மனோரா பற்றிய விளக்க போர்டும் வைத்திருப்பார்கள் போலிருக்கிறது. மழை, வெயில் என்று மாறி மாறி அனுபவித்து உயிரை மட்டும் கையில் பிடித்துக் கொண்டு ஒரு போர்டு நிற்கிறது.

மனோராவின் முன் வாசலை அடைவதற்கு வளைந்து செல்லும் சரிவான இரண்டு வழிகள். நினைவுச் சின்னத்தைச் சுற்றி வலுவான கோட்டையின் சுவர்கள் போன்ற பாதுகாப்பு அமைப்பு. தவிர — முன் வாயிலை அடையுமுன் ஒரு காலத்தில் அகழியாய் செயல்பட்ட பள்ளம், வீரர்கள் பதுங்க, குதிரைகள் நிறுத்த தனித்தனியாய் மறைவான இடங்கள்.

இனி மாடி மாடியாய் ஏறி உச்சிக்குச் சென்று ஏரியல் வியூவில் சுற்றுப்புறங்களைப் பார்க்க வேண்டியதுதான் — கடல் காற்றுத் தாலாட்ட. சுவர்களும், படிகளும் பெரும்பாலும் சிதிலமடைந்திருக்கின்றன. முட்டை தேய்த்த வழுவழுப்பான சுவர்கள்.

இந்த நினைவுச் சின்னத்தின் ஒவ்வொரு மாடியின் உள்புற சுவர்களிலும் 1934—ம் வருடத்திலிருந்து நம் முன்னோர்கள் ஒரு பழக்கத்தைத் துவக்கி வைத்துச் சென்றிருக்கிறார்கள். அது வழிவழியாக கவனமாகத் தொடரப்பட்டு வருகிறது. ஒரு விசிட்டர்ஸ் புக் வைக்காத குறையினாலோ என்னவோ இவர்கள் எல்லா சுவர்களிலும் ஒரு இஞ்ச் பாக்கி இல்லாமல் கையெழுத்திட்டு, விலாசம் எழுதி அமர்க்களம் செய்திருக்கிறார்கள். குழந்தைக்குப் பெயர் வைக்கத் திணறுபவர்களுக்கு இந்த இடம் மிக உதவும். போதாக் குறைக்கு கமெண்ட்ஸ் வேறு. அவற்றில் சில சுவையானவை:

'காதலனை மறந்த காதலியே, உன் கற்பை யாவது காப்பாற்றிக் கொள்வாயா?' — இப்படி ஒரு கேள்வி சுவரில். பாவமே, அப்புறம் என்ன நடந்திருக்கும்?

'வீரத் தமிழா, நின் பண்டைய நாகரீகத்திற்கு சாட்சியாய் நிற்கும் இந்த நினைவுச் சின்னத்தில் கீறியும் கிறுக்கியும் இப்படி அநாகரீகமாக நடந்து கொள்கிறாயே, இது நியாயமா? தருமமா?' என்று மனம் வெதும்பிப் போய் ஒரு விஸிட்டர் கிறுக்கியிருக்க... அதனடியில் இன்னொரு விஸிட்டர் 'சபாஷ் தமிழா!' என்று பதில் எழுதியிருக்கிறார்.

தவிர... பெண்கள் தலையைக் குனிந்து கொள்ள வேண்டிய 'செந்தமிழ்' வாக்கியங்களும் உண்டு. மனோரா சுற்றுலா மையமாக்கப் பட்டு, இந்த சுவர்கள் சுத்தப்படுத்தப்படும்

* உயிரைப் பிடித்துக் கொண்டு நிற்கும் விளக்க போர்டில் ஒரு தவறு: வாட்டர்லூ யுத்தம் 1815ல் நடந்ததாக என்ஸைக்ளோபீடியா கூறுவதால் மனோரா 1814 ல் உருவாகியிருக்க முடியாது.

போது. — இந்த மாதிரி சுவாரசியமான' சுவர்ச் செய்திகள் எல்லாம் போய்விடுமே என்று கவலையாய் இருக்கிறது.

சுவர் இலக்கியங்களைக் கடந்து உச்சிக்கு வந்தாயிற்று. நாலே பேர்தான் நிற்கலாம் போல சின்ன இடம். கால்களைப் படபடக்க வைக்கிற காற்று. தூரத்தில் சூரியக் கதிர்களின் மின்னல் அசையும் கடல் பரப்பில் தோணிகள் தள்ளாடுகின்றன. இன்னொரு பக்கம் பசேர் பசேர் என்று தென்னைமரங்களின் தொகுப்பு. இந்தப் பக்கத்தில்...வரிசையாக சிகரெட் பெட்டிகளை அடுக்கியது போல... அட இவை என்ன?

இறங்கியதும் முதல் வேலையாக விசாரித்தோம். கலைஞர் ஆட்சிக் காலத்தில் இங்கிருக்கும் மீனவர்கள் குடும்பங்களுக்காக இலவசமாகக் கட்டிக் கொடுக்கப்பட்ட நூறு சின்ன வீடுகள்தான் அவை. இவற்றில் பாதி வீடுகளில்தான் மீனவர்கள் உள்ளனர். மீதி வீடுகளில் வாசல் கதவோ, ஜன்னல் கதவோ கிடையாது. ஆரம்ப விழாவுக்கு அடுத்த வாரமே யார் யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்களாம். ஐம்பது வீடுகள் காலியாகக் கிடக்கின்றன. குடியிருக்கும் வீடுகளிலும் ஆர். சி. போடப்பட்ட கூரைகளில் அபாயகரமாய் விரிசல்கள். வெயிலையும், மழையையும் பாரபட்சமின்றி அனுமதிக்குமாம். கொஞ்சமும் வாழத் தகுதியற்ற வீடுகளாம். மீனவர்கள் தங்கள் குறைகளை ஆயிரம் அதிகாரிகளிடம் தெரிவித்தாயிற்று. ம்கூம், கண்டுக்கவே இல்லை.

இவர்களுக்குப் புதிதாய் ஒரு கவலை சேர்ந்துள்ளது. மனோரா சுற்றுலா மையமாக்கப்படும் போது — அருகே இருக்கும் இந்தப் பயன்படாத வீடுகள் இடித்துத் தள்ளப்படுமா? அப்படியென்றால் கொஞ்சம் வீடுகளில் குடியிருக்கும் இவர்களுக்கு வேறுபகுதியில் குடியிருப்பு வசதி செய்து தருவார்களா?

நம்பிக்கை தெரிவித்து நகர்ந்தோம்.

சராசரியாக தினம் ஐம்பது பேர் பார்வையிட வருகிற இந்தமனோரா சுற்றுலா மையமாக ஆக்கப்படுவதற்கான திட்டங்கள் என்ன, எப்போது முடிவுறும் என்கிற விவரங்கள் விரிவாய் இல்லை. சுற்றுலா பயணிகளுக்கான விடுதிகள், பூங்காக்கள், நீரைப் புஷ்பிக்கும் ஃபவுண்டன்கள், சிலைகள், கடலில் சுற்றுலாப் படகுகள் என்று எதுவும் செய்யட்டும்.

ஆனால்...

திருச்சிக்கு அருகே சுற்றுலா மையமாக்கப்பட்ட முக்கொம்பு இப்போது பலான, பலான காரியங்களுக்கு பயன்படுவதைப் போல— இதையும் ஆக்கி விடாமல் சுற்றுலா பயணிகளின் பாதுகாப்பிற்கும், மன நிம்மதிக்கும் வழி செய்யும் வகையில் ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்பதே அரசுக்கு நாம் விடுக்கும் வேண்டுகோள்.

படங்கள், கட்டுரை:

மிஸ். கவிதா.

# அடுத்த இதழில்...

- தெருவில் நடந்தால் போலீஸார் அடிக்கிறார்கள்!
- வீட்டுக்குள் புகுந்து பெண்களையும் அடிக்கிறார்கள்!
- ஊரே வெறிச்சோடிக் கிடக்கிறது!

## "சோளிங்கரில் போலீஸாரின் அட்டகாசம்!"

—நமது நிருபரின் நேரடி ரிப்போர்ட்

# உலகிற்குக் காட்டுங்கள், உண்மையான வெண்மை என்ன என்பதை

டெட்






## உன்னதம்...உன்னதம்...
## வெண்மையிலே
## அனைத்திலும் உன்னதம்!

உங்களுக்கு காட்டவும் டெட்டில் உண்டு ஏராளம். இதன் புதிய உறை—கண்ணைக் கவரும். திறந்து பாருங்கள் ஆச்சரிய மளிக்கும் இதன் புத்தம்புது மணம். இக்கட்டியில் அடங்கி யுள்ளது அதிக வெண்மைக்கான சக்தி.

நீங்கள் பாருங்கள்... காட்டுங்கள் உலகிற்கு
டெட் தரும் வெண்மையை... உண்மையான வெண்மையை.

Shilpi DM 9A/84 Tam.



* பிறந்த நாள் பரிசு

# வீரமணியின் அமெரிக்க அம்மா!

இராவிடர் கழகப் பொதுச்செயலாளர் கி. வீரமணியை அமெரிக்க மாது 'வெர்ஜீனியா கிசென்' தமது தத்துப்பிள்ளை போல் நடத்துகிறார். இவருக்கும் அந்த அமெரிக்கப் பெண்மணி மீது அளவில்லாப் பாசம். அந்த அமெரிக்க அம்மாவும், இந்த இந்தியப்பிள்ளையும் அறிமுகமானதே ஒரு சுவையான கதை!

1983ல் பாரிஸில் தமிழன்பர்கள், பெரியாரின் 105வது பிறந்த நாள் விழாவைக் கொண்டாட ஏற்பாடு செய்தனர். இதற்கு வீரமணி அழைக்கப்பட்டிருந்தார். புகைப்படக்காரர் 'சுபா' சுந்தரம், மற்றும் கழகத்தினர் இரண்டு பேரும் வீரமணியுடன் போயிருந்தனர்.

விழா முடிந்ததும் 'காஸ்மாஸ்டூர்' என்கிற ஏற்பாடு செய்யப்பட்ட டூரில் இவர்கள் நான்கு பேரும் பங்கேற்று ஐரோப்பாவின் பல நாடுகளுக்கும் சுற்றுப் பயணம் செய்தனர். அந்த டூரில், பங்கேற்ற பல்வேறு நாட்டவருள் அமெரிக்கப் பெண்மணி வெர்ஜீனியா கிசென் ஒருவர். வயது எழுபது.

பயணம் தொடங்கினதும், ஒவ்வொருவரும் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்கிற மரபு அங்கே உண்டு. வீரமணியின் முறை வந்ததும் அவர் தம்மைப் பற்றியும் பெரியார் மற்றும் திராவிடர் இயக்கம் பற்றியும் பேசினார்.

இந்தப் பேச்சு அந்த அமெரிக்கப் பெண்மணியைக் கவர்ந்துவிட்டது. தாமாகவே வந்து இன்னும் நிறைய பேசினார்; விளக்கங்கள் கேட்டார். அமெரிக்காவில் கறுப்பர் உரிமைக்குப் போராடின மார்ட்டின் லூதர் கிங் பற்றிச் சொன்னார்.

பெரியாருடன் கூடவே இருந்து அவருக்குப் பணிவிடைகள் செய்ததால், வீரமணிக்கு பொதுவாகவே முதியவர்களின்பால்

நெகிழ்வு ஏற்பட்டுண்டு. அந்த 70 வயதான பெண்மணிக்கு அவ்வப்போது, வாகனத்தில் ஏற இறங்க உதவுவது, பெட்டியைச் சுமந்து வருவது, தேவையானவற்றை வாங்கிக் கொண்டு வந்து தருவது போன்ற சிறு உதவிகளைச் செய்தார்.

அவருக்கும் வீரமணி மேல் பாசம் தோன்றியது. நிறையப் பேசினார். பேச்சுவாக்கில், தாம் சின்ன வயசிலேயே தாயை இழந்தது பற்றி வீரமணி சொன்னபோது எனக்கு இரண்டும் பெண்கள். ஆண் குழந்தைகளே இல்லை' என்று சொல்லிவிட்டு, "இன்று முதல் நீதான் என் மகன்" என்றதும், அது வரை அந்த அமெரிக்க மாதுவை 'மேடம்' என்று அழைத்துக் கொண்டிருந்த வீரமணி, அதைவிடுத்து, 'மாம்' என்று அழைக்க ஆரம்பித்தார்.

வியன்னாவில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்த போது 'மாம்'மின் பிறந்த நாள் வந்தது. அன்றுகாலை வீரமணி, அவருக்கு பிறந்த நாள் பரிசு தந்தார் — ஒரு அழகான தஞ்சாவூர்த் தட்டு. அதன் நடுவிலே பெரியாரின் படம். ரொம்பச் சந்தோஷப்பட்டார் 'மாம்'.

"இந்தியா வந்து, தாஜ்மகாலைப் பார்த்து விட்டுத்தான் சாக வேண்டும் என்பது என் ஆசை" என்று 'மாம்' சொல்ல வீரமணி, "எப்போது சௌகரியமோ, சொல்லுங்கள். ஏற்பாடு செய்கிறேன். அது என் கடமை" என்றார்.

ஊருக்குப் போய் நீண்டதொரு கடிதம் எழுதினார் 'மாம்'. புகைப்படங்கள் அனுப்பி இருந்தார். இவருடைய குடும்பத்தினர் போட்டோவும் கேட்டிருந்தார். அதுவரை வீரமணி தம் மனைவி குழந்தைகளுடன் போட்டோ எடுத்துக்கொண்டதில்லை. அம்மா ஆசையை நிறைவேற்ற போட்டோ எடுத்து அனுப்பி வைத்தார்.



* அமெரிக்க அம்மா.



* தாஜ்மகாலைப் பார்க்க ஆசை

84ல் ஒரு மாநாட்டுக்காக வீரமணி நியூயார்க் போக வேண்டியிருந்தது. வீரமணி அமெரிக்க அம்மாவுக்குத் தகவல் அனுப்பினார். "தன்னுடன் சில நாட்களாவது தங்குகிற மாதிரி வர வேண்டும்" என்று பதில் எழுதினார் 'மாம்'. அமெரிக்காவை அடைந்து வீரமணி ஓட்டலில் நுழைகிறபோது அவருக்கு ஒரே ஆச்சரியம்! 'மாம்' அங்கே தம் மகனை வரவேற்கக் காத்திருந்தார். நியூயார்க்கிலிருந்து 1500 மைல் தள்ளியிருக்கிற தம் ஊரிலிருந்து காரைத்தாமே ஓட்டிக்கொண்டு முதல் நாளே நியூயார்க் வந்து, அதே ஓட்டலில் ரூம் எடுத்துக் கொண்டு மகனை வரவேற்கத் தயாராகிவிட்டார் அம்மா!

மாநாட்டின்போது, தமிழகத்திலிருந்து வந்திருந்த அன்றைய சபாநாயகர் ராஜாராம் மற்றும் சிலரிடம் வீரமணியைக் குறித்து, "ஹி ஈஸ் மை ஸன்... யூ நோ?" என்று சொல்லி ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டாராம் அம்மா.

'மாம்' அமெரிக்காவைச் சுற்றிக் காட்டினார். தம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனார்.

வீட்டு வரவேற்பறையில் முதலில் இருந்தது வீரமணி, பரிசளித்த பெரியார் உருவம் பதித்த தஞ்சாவூர் தட்டு.

சென்ற கிருஸ்துமஸுக்கு அமெரிக்க அம்மா இந்தியா வந்திருந்தார். கிருஸ்துமஸ் நாளன்று வீரமணி ஆக்ரா போய் அம்மா ரொம்ப நாளாய்ப் பார்க்க ஆசைப்பட்டுக் கொண்டிருந்த 'தாஜ்மகாலை'க் காட்டினார். அம்மா மகிழ்ச்சிக் கடலில் மிதந்தார்.

சில மாதங்களுக்கு முன்பு, வீரமணியின் கார் தாக்கப்பட்டபோது, அமெரிக்காவில் உள்ள தமிழர் மூலம் அதை அறிந்த அம்மா, உடனே போன் பண்ணி உடல் நலம் விசாரித்தார். "ஒன்றுமில்லை.... கவலைப்படாதீர்கள்" என்று திரும்பத் திரும்பச் சொன்ன பின்தான் போனை வைத்தாராம் வீரமணியின் அமெரிக்க அம்மா!

— ஜூலி



# 100% வாங்கினாலும் இடம் இல்லை போ!

ஆதர்ஷ் வித்யாலயாவில் ப்ளஸ் டூ முடித்த வித்யா வாங்கின மார்க் 1200க்கு 1016. இவர் ஒக்கேஷனல் குரூப் எடுத்துப் படித்தார். மார்க் விவரம்: அக்கவுண்டன்ஸி 200க்கு 200. காமர்ஸ் 188. டைப்ரைட்டிங் 177. ஆபீஸ் செகரட்டரிஷிப் 152. சராசரியாக 90%

எல்லா மாணவிகளையும் போலவே, இவருக்கும் பி. காம் சேர ஆசை. நகர பெண்கள் கல்லூரிகள் நான்கிற்கு பி. காம் படிப்பிற்கும், இன்னொரு கல்லூரியில் பி. ஏ. வுக்கும் விண்ணப்பித்தார். ஒரு கல்லூரியிலிருந்தும் அட்மிஷன் விவரம் வராத நிலையில் இவருக்கும் இவரது பெற்றோருக்கும் கவலையாகிவிட்டது. எல்லா கல்லூரிகளுக்கும் ஒரு நடை போய் விசாரித்தும் பார்த்தார்கள். ஒரு வழியாய் குவின் மேரீஸ் கல்லூரியிலிருந்து ஜூலை 2ம் தேதி இண்டர்வியூவுக்கு ஒரிஜினல் சர்டிபிகேட் மற்றும் பணத்துடன் வரும்படி கார்டு வந்தது.

அப்புறம் என்ன ஆயிற்று? வித்யா சொல்கிறார்: "நினைத்தபடியே பி. காம் கிடைத்தது பற்றி எனக்கு ரொம்ப சந்தோஷம். சர்டிபிகேட்டுகள் மற்றும் பணத்துடன் காலேஜுக்குப் போனேன். வைஸ் பிரின்ஸிபாலைப் பார்க்கச் சொன்னார்கள். பார்த்தேன். எனக்கு வந்த அட்மிஷன் கார்டை வாங்கிப் பார்த்தார். "தவறுதலாக உனக்கு கார்டு அனுப்பி விட்டோம். உனக்கு ஸீட் இல்லை" என்று சொல்லி கார்டைத் தானே வைத்துக்கொண்டு விட்டார். எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அப்செட் ஆகிவிட்டேன். அழுகை அழுகையாய் வந்தது. நேரே என் அப்பாவின் ஆஃபீஸுக்குப் போனேன்."

வித்யாவின் அப்பா ராமராவ் ஒரு பாங்கில் பணிபுரிகிறார். அவர், "கார்டே அனுப்பாவிட்டால் பரவாயில்லை. ஆனால் அனுப்பிவிட்டு 'தவறாக அனுப்பிவிட்டோம். உனக்கு ஸீட் கிடையாது' என்று சொன்னால் எப்படி? இதில் ஏதோ சதி இருக்கிறது" என்று பரபரத்தார்.

நமது நிருபருக்கு விஷயம் தெரிந்ததும் நேரே குவின் மேரீஸ் கல்லூரிக்குப் பறந்தார். தேர்வு செய்யப்பட்ட மாணவிகள் லிஸ்ட்டில் பார்த்தபோது அதில் பி. காம்க்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட, முற்படுத்தப்பட்ட சமூக கோட்டாவில் ஐந்தாவதாக வித்யாவின் பெயர் இருந்தது. ஆனால், அது மட்டும் அடிக்கோடிடப்பட்டிருந்தது. நிருபருக்குக் குழும்பம். பிரின்ஸிபாலைச் சந்திக்க முயன்றபோது, துணை பிரின்ஸிபாலைச் சந்திக்கச் சொல்லிவிட்டார்கள்.

துணை முதல்வரை நிருபர் சந்தித்தார். அவர் பொறுமையுடன் விளக்கினார்: "அரசாங்கம் பி. காம் அட்மிஷனுக்கு சில சட்டதிட்டங்களை வகுத்துள்ளது. அதன்படி +2வில் காமர்ஸ் குரூப் எடுத்தவர்கள், மற்ற பாடங்களைப் படித்தாலும், அக்கவுண்டன்ஸி அல்லது காமர்ஸில் எதில் அதிக மார்க் எடுத்திருக்கிறார்களோ, அந்த மார்க்கை வைத்து அட்மிஷன் தரவேண்டும். ஒகேஷனல் குரூப்காரர்களுக்கு அவர்கள் படித்த அக்கௌண்டன்ஸி, காமர்ஸ், டைப்ரைட்டிங், ஆபீஸ் செக்ரட்டரிஷிப் என்கிற 4 பேப்பர்களின் சராசரியை வைத்து அட்மிஷன் தரவேண்டும். வித்யாவின் கேஸில் முதலில் அக்கவுண்டன்ஸியின் 100% மார்க்கைப் பார்த்து கார்டு அனுப்பிவிட்டோம். ஆனால் அப்புறம் தான் அவர் ஒக்கேஷனல் குரூப் மாணவி என்றும், அவருக்கு நாலு பாட சராசரியைக் கணக்கில் கொண்டு அட்மிஷன் தரவேண்டும் என்றும் கண்டுபிடிக்கப்பட்டது. வித்யாவின் நாலு பாட சராசரி 90%தான். எனவே அட்மிஷன் தர முடியவில்லை. அரசாங்க விதிகளை நாங்கள் மீற முடியாது. எங்கள் கைகள் கட்டப்பட்டு விட்டன. ஐ'ம் ஸாரி!"

இப்போது நமது கேள்வி: அரசாங்க ப்ளஸ் டூ பரீட்சை எல்லாருக்கும் பொதுதானே! பி. காம் அட்மிஷனுக்கு காமர்ஸ் குரூப்காரர்களுக்கு ஒரு விதியும், ஒக்கேஷனல் குரூப்காரர்களுக்கு ஒரு விதியும் ஏன்? இதன்படி பார்த்தால், அக்கவுண்டன்ஸியில் மட்டும் 100% வாங்கிவிட்டு, மற்றவற்றில் 40% வாங்கின காமர்ஸ் குரூப் மாணவருக்கு இடம் கிடைக்கும். ஆனால் அக்கவுண்டன்ஸியில் 100 சதமும் மற்றவற்றில் 90 சதமும் வாங்கினால் கூட, ஒக்கேஷனல் குரூப் மாணவருக்கு இடம் கிடைக்காது என்று ஆகிறதே!

ஏன் இந்த இரட்டை அளவுகோல்?

—நிருபர்.

படம்: யோகா.

'அட்மிஷன் ஜுரம். இறங்கி வரும் நேரமிது.. எப்படியாவது தன் பையனுக்கு, பெண்ணுக்கு காலேஜ் சீட் வாங்கிவிட மந்திரியின் அங்க வஸ்திரத்திலிருந்து, கல்லூரி பியூன் சட்டை வரை இழுத்துப் பார்த்து விட்டு ஓய்ந்து போயிருக்கிறார்கள் பெற்றோர்கள்.

"இந்த வருஷம் எப்படி?" என்று மீனாட்சி பெண்கள் கல்லூரியின் முதல்வர் குமாரி லட்சுமியைக் கேட்ட போது.....

"எந்த வருஷமும் ஒரே மாதிரி டிமாண்ட் தான். பி. காம். படிப்புக்கு இந்த வருஷம் இன்னும் கொஞ்சம் டிமாண்ட் கூட. அவ்வளவுதான். காரணம் எல்லோரும் பாங்க் வேலையை நினைத்துக் கொண்டு பி. காம். படிக்க நெருக்குகிறார்கள். பி. எஸ்ஸியில் பிரதம பாடமாகக் கணக்கு படித்தாலும் வங்கிகளில் பி. காம். பட்டத்துக்கு நிகராகப் பார்க்கிறார்கள் என்று சொன்னால் கூடக் கேட்க மாட்டேன் என்கிறார்கள்.... ஒரு ஸீட் பிடிக்க இன்றைக்கு பன்னிரண்டு பேர் முயற்சி செய்கிறார்கள்...." என்றார்.

அட்மிஷன் தவிர ஒரு கல்லூரி முதல்வர் என்ற முறையில் பல வகையான பிரச்னைகளைச் சந்திக்க வேண்டியிருக்கிறது என்றும் சொன்னார் இவர்.

"கல்லூரி மாணவ, மாணவிகள் பாடத்தில் கவனம் செலுத்திப் படிக்க வேண்டும் என்றால் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்கள் மிகத் திறமையானவர்களாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட ஆசிரியர்களை நாங்கள் தேர்ந்தெடுக்க முயலும்போது எங்களுக்குப் பிரச்னைகள் தோன்றுகின்றன.

"உதாரணத்துக்கு பொருளாதாரப் பாடத்திற்கு ஒரு விரிவுரையாளரை நியமிக்க வேண்டும் என்று வைத்துக் கொள்வோம். நாங்கள் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சுக்கு எழுதி அவர்கள் அனுப்பும் லிஸ்டில் உள்ளவர்களையே இன்டர்வியூவுக்கு அழைக்க வேண்டும். வேலை வாய்ப்பு நிறுவனம் பதிவு செய்தவர்களின் சீனியாரிட்டிபடி அனுப்புகிறது. அந்த வகையில் பத்து வருஷத்துக்கு முன்பு எம். ஏ. பாஸ் செய்து, பதிவு செய்து விட்டு காத்துக் கொண்டிருப்பவர்களை அனுப்புகிறது. அவர்கள் மீதும் தவறில்லை தான்.

"ஆனால் இவர்கள் எம். ஏ. பாஸ் செய்த பிறகு கடந்த பத்து வருஷங்களில் எகனாமிக்ஸ் துறையில் எத்தனையோ முன்னேற்றங்கள் ஏற்பட்டிருக்கும். புதிய தத்துவங்கள் உருவாகியிருக்கும். இவர்களுக்கும் பாடத்தில் 'டச்' விட்டுப் போயிருக்கும். இப்படிப்பட்டவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டி வரும் போது மிகவும் சங்கடமாக இருக்கிறது.

"மாணவிகள் பக்கம் பார்க்கும்போது அவர்களுக்கு ஒரு விஷயம் சொல்வேன். அம்மா அப்பாவை கஷ்டப்படுத்தி 'பீஸ்' கட்ட வைத்து ஏகப்பட்ட செலவுகளுடன் காலேஜ் வாழ்க்கை ஆரம்பிக்கிறார்கள். அப்புறம் நண்பர்களுடன் சேர்ந்து பீச், சினிமா எனப் பலர் காலேஜ் 'கட்' அடிக்கிறார்கள்.

"இப்படிப்பட்ட மாணவிகளை என்னால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. நூறு ரூபாய்க்குப் புடவை வாங்க வேண்டுமானால், கொடுக்கிற பணத்துக்கு அதிகமாகவே தரத்தை எதிர்பார்க்கிறார்கள்.

"ஆனால் கட்டும் பீஸுக்கு முழுமையாகக் கல்வியைக் கல்லூரியிலிருந்து எடுத்துக் கொள்கிறார்களா என்றால் அதுதான் இல்லை! இவர்கள் பெற்றோர்கள் மட்டுமா பணம் செலவழிக்கிறார்கள்? ஒரு மாணவி பட்டதாரி ஆக வேண்டுமானால் பெற்றோர், கல்வி நிறுவனம், அரசாங்கம் மூன்றும் சேர்ந்து செலவு செய்கிறது. அந்தப் பணமெல்லாம் நம்முடைய வரிப் பணம்தான். இப்படி நமக்காகதாமே மூன்று வகையில் செலவழிக்கின்ற பணத்துக்கு மூன்றில் ஒரு பங்கு கூட அறிவைப் பெற்றுக் கொள்ள வில்லையானால் என்ன செய்வது?" என்கிறார் கல்விக்காகவே தம் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டுள்ள முதல்வர் லட்சுமி.

பேட்டி: மஞ்சுளா ரமேஷ்

புகைப்படம்: யோகா



# பிரின்ஸிபாலுக்கும் பிரச்னைகள் உண்டு!


ப்ளீஸ்.. ப்ளீஸ்
தமிழ் ஈழப் போராட்டக் குழுவினர்
திம்பு பேச்சு வார்த்தைகள்


மேற்கு வங்க காங்கிரஸ் தலைமை
என்னை விட்டுடுங்க!
பிரணாப் முகர்ஜி
உங்களை விட்டா வேற ஆள் கிடையாது! அப்படியே இருங்க!
அருண் நேரு
கல்கத்தா தேர்தல் காங்கிரஸ் தோல்வி


இன்னு தொரை.. பாத்தியா.. பேச்சிலேயே படா 'கிக்கு!'


மது விலக்கை அமல் செய்ய முடியாததற்குச் சப்பைக் கட்டு
மது




# கல்கி

*1985 ஜூலை 14*
*மலர் 43 இதழ் 50*
*குரோதன ஆனி 30*




# தொழிற்சங்கமா? தொல்லைச்சங்கமா?

**தொ**ழிலாளர் நலன் என்பது அவர்களது உரிமைகளைப் பாதுகாப்பது மட்டுமல்ல, கடமைகளை உணர்த்துவதுமாகும். இதனைப் புரிந்துகொள்ளாத தொழிற்சங்கத் தலைவர்களால் நாட்டுக்கும் மக்களுக்கும் மட்டுமின்றித் தொழிலாளர் நலனுக்கே கூட தீமைதான் விளையும்.

ஒரு வர்த்தக நிறுவனத்தில் அல்லது ஒரு தொழிலகத்தில் வேலை நிறுத்தம், கதவடைப்பு, 'கோ ஸ்லோ' என்றால் நாடும் மக்களும் பாதிக்கப்படத்தான் செய்கிறார்கள். ஆனால் அந்தப் பாதிப்பு உடனடியான உபத்திரவமாக இராது. ஆனால் மின்சார ரயில் ஓடாது போனாலோ, மின் விநியோகத்தில் இடையூறு ஏற்பட்டாலோ அல்லது பஸ் போக்குவரத்து பாதிக்கப்பட்டாலோ மக்கள் சொல்லொணாத் துயருக்கு உடனடியாக உள்ளாகிறார்கள். எனவே மக்களுக்கு நேரடியாக அன்றாடம் உதவுகின்ற பால் வழங்கு துறை, தபால் துறை போன்ற அத்தியாவசியத் துறைகளில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கும் அவர்களை வழி நடத்திச் செல்கிற தொழிற்சங்கத் தலைவர்களுக்கும் இரட்டிப்புப் பொறுப்புணர்ச்சி இருக்க வேண்டும். ஆனால் பல்லவன் போக்குவரத்தில் உள்ள அ. இ. அ. தி. மு. க. தொழிற்சங்கத் தலைவர்கள் இதனை உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை.

தொழிற்சங்கங்களில் அரசியல் புகுந்து கொண்டு அரசியல் கட்சிகள் செல்வாக்குப் பெற முயல்வது நடைமுறையாகிவிட்டது. தொழிலாளர் வோட்டுக்களை ஒட்டு மொத்தமாகக் கட்சிக்குப் பெறுவதே இதன் நோக்கம். பல்லவன் போக்குவரத்தில் ஆளும் கட்சியான அ. இ. அ. தி. மு. க. சக்தி வாய்ந்த தொழிற்சங்கமாக விளங்குகிறது. அந்தத் தொழிற்சங்கத்தின் நிர்வாகிகள் தேர்தல் ஜூலை ஆறாம் தேதி என நிர்ணயிக்கப்பட்டது. இந்தத் தொழிற்சங்கத்துக்குள்ளேயே கோஷ்டி மனப்பான்மையும் போட்டா போட்டியும் தீவிரமாக இருக்கிறது. எனவே தேர்தல் சூடு பிடிக்க, அந்தத் தொழிற்சங்கத்தைச் சேர்ந்த எல்லாரையும் தேர்தல் ஜுரம் பீடிக்க, பொது மக்கள் சுமார் ஒரு வார காலம் அவதிப்பட நேர்ந்தது. காரணம், பஸ் டிரைவர்கள், கண்டக்டர்கள் எல்லாரும் லீவு போட்டுவிட்டுத் தேர்தல் வேலைகளில் இறங்கியதுதான். பஸ்கள் குறிப்பிட்ட நேர இடைவெளியில் அடுத்தடுத்து வராததால் ஒவ்வொரு ஸ்டாப்பிலும் பஸ்ஸுக்காகக் கால்கடுக்கக் காத்திருந்த மக்கள் **கூட்டத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ஒவ்வொருவருக்கும் என்ன அவசர வேலை பாதிக்கப்பட்டதோ, எத்தனை கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டனவோ!**

ஒரு தொழிற்சங்கத்துக்குள்ளேயே தேர்தல் நடப்பதும் ஜனநாயகம் நிலவுவதும் வரவேற்கப்பட வேண்டியதுதான். ஆனால் அதைப் பொது மக்களுக்குத் தொல்லை தராத விதமாக நடத்திக் கொண்டிருக்க முடியாதா? அ. இ. அ. தி. மு. க. தலைமை இதனைத் தனது கட்சியின் பெயர் தாங்கிய தொழிற் சங்கங்களின் தலைவர்களுக்கு உணர்த்த முடியாதா?

**முடியாது என்றால், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்று போதித்த அண்ணாவின் நாமம் வாழ்க என்று கோஷிக்க அவர்களுக்கு யோக்கியதை ஏது?**

---

*தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற*
*தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.*

## நீங்கள் கேட்டவை

* அ. சாம்பசிவம், நம்மாழ்வார்பேட்டை.

? திருக்குறளாரைத் தமிழக அரசு மேலவைத் தலைவராக்கினால்?

! உஷ்.... இரைந்து சொல்லாதீர்கள் ம.பொ.சி. கோபித்துக் கொள்ளப் போகிறார்!

* எஸ். ஆரோன் பிரபு, திருச்சி.

? திருச்சியில் உங்களைக் கவர்ந்த இடம்?

! படிகளிலேறி மூச்சு வாங்க தாயுமானவர் சன்னிதியை அடைந்து தரிசித்துவிட்டு வியர்த்துக் கொட்ட இன்னும் கொஞ்சம் மேலேறி உச்சிப் பிள்ளையாரை அடையுமுன்னால் நெஞ்சு துருத்தியாக, அச்சமயம் வெட்ட வெளியில் மொட்டைப் பாறையில் மாலை வேளையில் இளைப்பாறும்போது ஜிலுஜிலு காற்றையும் திருச்சியை ஒரு பறவைப்

* நேர்மையின் விலாசம்.





* விழா வீணதானு?

பார்வையில் காணமுடிவதையும் ஒரேசமயத்தில் அனுபவிக்கிற சுகத்துக்கு ஈடாகத் திருச்சியில் வேறேதும் இருப்பதாய் எனக்குத் தெரியவில்லை. .

* சங்கரன், திருநெல்வேலி.

? உன் கண்ணில் நீர் வழிந்தால் படத்தில் சூப்பர் ஸ்டார் ரஜினி மேக்அப் இல்லாமல் தூளாக இருக்கிறாரா இல்லையா?

! அவருக்கு மேக்கப் போடாவிட்டாலும் கதையை நன்றாக மேக்கப் செய்திருந்தால் ரஜினிக்கு தூள் கிளப்ப வாய்ப்பிருந்திருக்கும்.

* சந்தனஜோதி, நாகப்பட்டினம்.

? மக்களின் குறைபாடுகளைத் தீர்த்து வைக்கும் அரசு நம் நாட்டில் இனிமேலாவது அமையுமா?

! இப்போதே அமைந்திருக்கிறதே! அமைச்சர்கள் ஆளும் கட்சிக்காரர்கள் இவர்களெல்லாரும் மக்கள்தானே!

* வி.எம்.கருணாகரன், சின்னதாமல்செருவு.

? ஆகாய விமானத்தில் பறக்கும் ஆசை— இன்னமும் மிச்சம் மீதி இருக்கிறதா?

! சாலை விபத்துக்குப் பயந்து கொண்டு வீட்டை விட்டே வெளியே வரமாட்டேன் என்று சொல்ல முடியுமா? யாராவது டிக்கெட் எடுத்துத் தந்தால் உலகைச் சுற்றிப் பறக்க இதோ நான் தயார்!

* சா. ரமேஷ்பாபு, லால்குடி.

? நேர்மையின் விலாசம் தேவை.



* ம. பொ. சிக்குக் கோபம்!

! நேர்மை, C/o. காந்தி சமாதி, புது தில்லி.

* வா. வந்தியத்தேவன், திருப்பூர்.

? சரித்திரக் கதைகளில் உங்களைக் கவர்ந்த ஹீரோ யார்?

! உங்களுக்குப் பெயர் சூட்டியவருக்குப் பிடித்த ஹீரோதான் எனக்கும் பிடித்த ஹீரோ.

* நெல்லை சுவாதி, சென்னை—33.

? எந்த விஷயத்தில் பிரதமர் ராஜீவின் போக்கு கண்டிக்கத்தக்கது?

! அவருக்கும் ராஷ்டிரபதிக்கும் இடையில் கருத்து மாறுபாடு இருக்கலாம். தவறில்லை. ஆனால் அவரை சந்திக்காமல் ஒதுக்குவதும் அது பற்றி பத்திரிகையாளர் கேட்டபோது விட்டேற்றியாகப் பதில் சொன்னதும் பிரதமருக்கு அழகல்ல.

# நேர்மையின் விலாசம்

* பி. எல். பரமசிவம், மதுரை.

**? உங்கள் உள்ளத்தை உறுத்திக் கொண்டே இருக்கும் ஒரு விஷயத்தை மனம் விட்டுச் சொல்லுங்களேன்!**

! என்னை முந்திக் கொண்டு என்னை உறுத்திக் கொண்டிருக்கும் அதே விஷயம் பற்றி ஐ.என்.டி.யூ.ஸி. தலைவர் ஜி. ராமானுஜம் அவர்களும் அறிக்கைவிட்டிருக்கிறார். மது விலக்கை அமல் படுத்த முடியவில்லை என்று மூக்கால் அழுகிறது தமிழக அரசு. அரசின் கையாலாகாத்தனத்தை ஒப்புக் கொண்டிருக்கிறார் நெடுஞ்செழியன். போகட்டும், சாராயக்கடைகளில்வேலைபார்க்கக்குறைந்த பட்ச வயது 21 என இருந்த சட்டத்தை ஏன் ரத்து செய்ய வேண்டும்? சிறுவர்கள் எல்லாம் கூட இனி குறைந்த சம்பளத் துக்கு வேலைக்கு அமர்த் தப்படுவார்கள், குடிப் பழக்கத் திற்கு அடிமையாவார்கள். மேலும் சாராயக் கடைகளைத் திறந்து வைக்கிற நேரத் தையும் அதிகரித் திருக்கிறது அரசு. இதற்கெல்லாம் அவசியம் என்ன வந்தது? இத் தனைக்கும் பிறகு முதல்வருக்கு மது விலக்கில் நம்பிக்கை உண்டு, அவர் ராஜாஜி, காமராஜ், அண்ணா ஆகியோர் வழியில் செல்லவே விரும்புகிறார் என்று கூறுவது அந்தப் பெரியவர்களையெல்லாம் அவமதிப்பது போலிருக்கிறது.

* ஆர். என். ராஜ், சீர்காழி.

**? எம். ஜி. ஆரால்தான் இலங்கையில் அமைதி நிலவியது என்று சிலர் கூறுகிறார்களே உண்மையா?**

! கோபுரத்தை பொம்மை தாங்குவது உண்மையானால் இதுவும் மெய்தான்.

* முருகேசன், தேனி. *

**? பிரான்ஸ் அமெரிக்காவில் நடத்திய இந்திய விழாச் செலவுகளை இந்தியாவில் ஏழைகளுக்கு உதவ செலவழித்திருந்தால் சிறப்பாயிருந்திருக்கும் என்று அன்னை தெரஸா கருத்துத் தெரிவித்திருக்கிறாரே?**

! ஏழைகளுக்கு உதவுவதில் இரு வகை உண்டு. ஒன்று நேரடியாக அவர்களுக்குப் பணம், வீடு, உடை, உணவு முதலியன அளித்து அவர்கள் நிலையை உயர்த்துவது. இது நிரந்தரப் பரிகாரம் ஆகாது. மற்றொன்று நாட்டின் தொழில் வளம், பொருளாதார வளத்தைப் பெருக்கி அதன் மூலம் வேலை வாய்ப்புக்களை அதிகரித்து அனைவரும் பயனுள்ள வேலை செய்து சொந்தக் காலில் நிற்க வழி வகுப்பது. இந்த இரண்டாவது முறைதான் ஏழ்மை ஒழிப்புக்கு நிரந்தரப் பரிகாரமாகும். பொருளாதார ரீதியில் சிறந்ததும் மக்களிடையே தன்னம்பிக்கையை வளர்ப்பதும் இதுவே. அயல் நாடுகளில் நடக்கும் இந்திய விழாக்கள் அந்நாட்டவருக்கு இந்தியா மீது நல்லெண்ணமும் நம்பிக்கையும் ஏற்பட வழிவகுத்து முதலீட்டையும் தொழில் நுணுக்கத்தையும் பெற்றுத் தருமானால் ஏற்றுமதிக்கு உதவுமானால் விழாக்களுக்கான செலவை வீண் விரயம் என்று கருத முடியாது.

* பிரதமருக்கு அழகல்ல.





* உள்ளத்தின் உறுத்தல்.



* கட்சி நீக்கம்.

* ஜோ. பன்னீர்செல்வன், காரைக்குடி.

**? புராணப்படங்களில் நடித்ததற்காக நடிகை லதாவைக் கட்சியை விட்டு நீக்கிய எம். ஜி. ஆர். இப்போது மூகாம்பிகை அம்மன் கோவிலுக்குச் செல்வது முறையா?**

! அவர் நினைத் ததை முடிப்பவரே தவிர சொன்னதைச் செய்பவர் அல்ல.

* **ரூ. 10 பரிசு பெறுபவர்:**
**முருகேசன்,**
**185, பழைய டி. வி. எஸ். தெரு,**
**தேனி—626531.**

# தேவை!

**தராசு**

இப்பொழுது நடைபெறுகிறது ஆனந்த் A/C, சங்கம் A/C,
சந்திரன் A/C, — ஸ்ரீ பிருந்தா A/C தினசரி 3 காட்சிகள்
மற்றும் தென்னாடெங்கும்

பி.ஆர்.கிரியேஷன்ஸ்

# மயூரி

தமிழ்-கலர்

சிங்கீதம் சீனிவாசராவ்

பாடல்கள்: வாலி

Sujatha Films
PRIVATE LIMITED

S.P.பாலசுப்ரமணியம், A.ராதாகிருஷ்ணன்



* மதுரை வைத்தியநாத அய்யர்

### ராஜாஜி வாழ்க்கை வரலாறு
### ராஜ்மோகன் காந்தி

**14**

**செ**ன்னகத்தின் மாபெரும் கோயில்களின் கதவுகளை ஹரிஜனங்களுக்குத் திறந்து விட வேண்டும் என்பது பல ஆண்டுகளாய் ஸி. ஆரின் லட்சியமாக இருந்து வந்தது. அவர் வகித்த பதவியும் அதன் காரணமாகப் பெற்றிருந்த அதிகாரமும் இந்த லட்சியம் பெருமளவு நிறைவேற உதவியது. ஆனால் இந்த லட்சியத்தை அடைவதற்கான மார்க்கம் நேரானதாய் இல்லை. மேடு பள்ளங்களுடன் விளங்கியது. எதிர் கட்சியினர் முட்டுக் கட்டை போட்டனர். சுற்றி வளைத்துச் செல்லும் பாதையை ஸி. ஆர். தாமே வலியத் தேர்ந்தெடுத்தார்.

ஆரம்பத்தில், அதாவது 1938 ஜனவரியில் எம். ஸி. ராஜாவின் ஒரு திட்டத்துக்கு ஆதரவு தருவதாக வாக்களித்திருந்தார் ஸி. ஆர். இதன்படி ஒரு கோயிலை ஹரிஜனங்களுக்குத் திறந்து விடும் உரிமை அந்தக் கோயிலில் வழிபடுவோருக்கே விடப்பட்டிருந்தது. அவர்கள் பெரும்பான்மை வாக்குகள் அளித்து இதற்கு வழி வகுக்கலாம். 1933 லேயே இந்த மசோதாவை ராஜா தயாரிக்க ஸி. ஆர்தான் உதவியிருந்தார். ஆனால் இப்போது 1938 ஆகஸ்டில் — அதாவது எம். ஸி. ராஜாவின் மசோதா சட்டசபையின் பரிசீலனைக்கு உள்ளாகச் சில நாட்களே பாக்கியிருந்தபோது திடீரென்று ஸி. ஆர். மனம் மாறினார். அவசரப்படக்கூடாது. முன்னெச்சரிக்கையாகச் செயல்பட வேண்டும் **என்று கருதினார் போலும்.** மலபார் மாகாணத்தை மட்டுமே இந்த மசோதா பாதிக்கும் என்று முடிவு செய்து விட்டார்.

எதற்காக இந்த முன்னெச்சரிக்கை? மாகாணத்தின் அனைத்து ஆஸ்திகர்களின் கோபமும் தன் பேரில் ஒரே சமயத்தில் திரும்புவதை அவர் விரும்பாததுதான். ஏற்கெனவே ஹிந்தி விஷயத்தில் அவர் சந்தித்து வந்த இடைவிடாத எதிர்ப்பு போதாதென்று இது வேறு சேர வேண்டுமா? ஏன் மலபாரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் அவர்? அது திருவனந்தபுரத்துக்கு அருகில் இருக்கிறது என்பதால். ஸி. ஆரின் வார்த்தைகளில் சொல்வதென்றால் ''மலபார், திருவனந்தபுரத்துக்கு ஒன்று விட்ட சகோதரன்''. திருவனந்தபுரத்தில் இளம் மகாராஜாவின் ஆக்ஞையின் பேரில் பொதுக் கோயில்கள் ஏற்கெனவே ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டிருந்தன.

''நான் ஏமாற்றப்பட்டிருக்கிறேன்'' என்று எடுத்த எடுப்பில் வெடித்த ராஜா பின்னர் ஒரே ஒரு ஜில்லாவில் மட்டுமே திட்டத்தைச் செயல்படுத்த விரும்பினால் சேலத்தைத் தேர்ந்தெடுக்குமாறு ஸி. ஆரைக் கேட்டுக் கொண்டார். ஆனால் பிற்பாடு, மலபார் ஹரிஜன ஆலயப் பிரவேச மசோதாவுக்குத் தம் ஆதரவை அளித்தார் ராஜா. செப்டம்பர் 1938ல் கடும் எதிர்ப்புக்கிடையே சட்டம் நிறைவேறியது.

அடுத்தடுத்து நிகழ்ந்த பல சம்பவங்கள் காரணமாக ஸி. ஆர். தயக்கத்தை விட்டொழித்தார். ஹரிஜன ஆலயப் பிரவேசம் தொடர்பான மகத்தான பல காரியங்களை, அவை காரசாரமான விவாதத்துக்குள்ளாகக் கூடியவை என்பது தெரிந்தும் செய்யத் துணிந்தார். ஜவாஹர்லால் நேருவின் உறவினரான ராமேசுவரி நேரு தலைமை தாங்கிய ஆலயப் பிரவேச மாநாடு ஒன்று மதுரையில் நடந்தது. அம்மாநாட்டின் போது, மதுரை மீனாக்ஷி அம்மன் ஆலயத்தில் ஹரிஜனங்களை அனுமதிக்க அக்கோயிலின் பெரும்பாலான டிரஸ்டிகளும், புரோகிதர்களும் தயாராக இருந்தனர் என்பதை ஸி. ஆர். கண்டு கொண்டார். ஆனால் அவர்கள் தயக்கம் காட்டியதற்குக் காரணம் இருந்தது. அது ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை எதிர்த்த பிற புரோகிதர்களும், பக்தர்களும் தங்கள் சமய உணர்வுகள் பாதிக்கப்பட்டுள்ளதாக இவர்கள் மீதும் ஆலயப் பிரவேசம் செய்யும் ஹரிஜனங்கள் மீதும் வழக்குத் தொடுக்கலாம் என்பதுதான்; அந்த உரிமை அவர்களுக்கு இருந்ததுதான்.

# ஹரிஜன ஆலயப் பிரவேசம்



"சார்! நான் உங்க பொண்ணைக் கடந்த ஒரு வருஷமா காதலிச்சுக்கிட்டிருக்கேன். அவளைக் கல்யாணம் செய்துக்கலாம்னு இருக்கேன். பெண் பார்க்க எப்ப வரச் சொல்றீங்க?"

ஆலயப்பிரவேசத்திற்கு சம்மதிப்பவர்கள் முன் வந்து வழி நடத்திச் செல்வார்களேயானால் தாம் எட்டே நாட்களில் அவர்களுக்கு உதவும்படியாக ஒரு சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றுவதாக ஸி. ஆர். வாக்களித்தார். 1939 ஜூலை, 8ம் நாள் ஸி. ஆரின் நெடு நாள் நண்பர் வைத்தியநாத ஐயர் ஒரு ஹரிஜன கோஷ்டியைக் கோயிலுக்குள் அழைத்துச் சென்றார். அதிகாரிகள் அதை அனுமதித்தார்கள்.

எதிர்ப்பு வெடித்தது. கோயிலின் நிர்வாக அதிகாரி மீது கிரிமினல் வழக்கு தொடரப்பட்டது. கோயிலைத் தூய்மைப்படுத்த **புண்ணியாகவாசனம் செய்ய வேண்**டும் என்று கோரிக்கை எழுந்தது. ஆனால் ஓரிரு நாட்களுக்குள் மதுரையின் மற்ற பல கோயில்களிலும் ஹரிஜனங்கள் பிரவேசித்தனர். "என் ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை" என்றார் ஸி. ஆர். "இரவெல்லாம் சந்தோஷத்தினால் தூக்கமே வரவில்லை!" மதுரைச் சம்பவம் நிகழ்ந்த மூன்றாவது நாள் ஆலயப் பிரவேசம் செய்யும் ஹரிஜனங்களையும் அதை அனுமதிக்கும் கோயில் அதிகாரிகளையும் தண்டிக்க முடியாது என்று பாதுகாப்பளிக்கும் மசோதா பிரசுரமாயிற்று. ஆறாவது நாள் அதன் தன்மைகளை உள்ளடக்கிய அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது.

இதற்குள் தஞ்சாவூரில் இருந்த 90 கோயில்களும் ஹரிஜனப் பிரவேசத்துக்கு அனுமதி வழங்கிவிட்டன. குற்றாலம் கோயிலும் மனம் இறங்கியது. ஆனால் ஸ்ரீரங்கம் கோயிலின் வைஷ்ணவ புரோகிதர்களை வைஷ்ணவ பிரதம மந்திரியால் கூட உடனடியாக வெல்ல முடியவில்லை.

கோயில் அதிகாரிகள் தைரியமாகச் செயல்படுவதற்கு வழிவகுத்த அவசரச் சட்டமும் மசோதாவும் கடுமையான விமர்சனத்துக்கு உள்ளாயின. முற்காலத்தில் கஜனி முகமது கோயில்களுக்கு இழைத்த அநீதிகளுடன் இதனையும் ஒப்பிட்டார் கிருஷ்ணமாச்சாரி. பூஜைக்குரிய இடத்தில் மக்கள் வன்முறையில் ஈடுபட ஸி. ஆர். தூண்டி விட்டிருப்பதாகக் குற்றம் சாட்டினார். "ரத்தம் சிந்தும்" என்று ஜோஸியம் சொன்னார். பழியை உங்கள் தலைதான் சுமக்க வேண்டும் என்று பிரதம மந்திரியை எச்சரித்தார். "அரசாங்கத்தின் கைப்பொம்மைகளாக விளங்கிய கோயில் தர்மகர்த்தாக்களிடம் இவ்வளவு பெரிய பிரச்னையில் முடிவெடுக்கும் உரிமையை வழங்குவது முறையா?" என்று வினா எழுப்பினார். இருப்பினும் "தாம் தனிப்பட்ட முறையில் பாதிக்கப்படவில்லை" என்று கூறும் தவற்றையும் செய்தார் டி. டி. கே. "என் தகப்பனார் ஆசார சீலர். என் வீட்டிலேயே இறைவனை எப்படி வழிபடுவது என்று எனக்குத் தெரியும்" என்றார். ஸி. ஆர். சரேலெனப் பாய்ந்தார். கோயில்களின் மீது அரசு ஆதிக்கம் செலுத்துகிறது என்ற தர்மசங்கடமான விஷயத்தை விட்டுவிட்டு 'வீட்டிலேயே வழிபடுவேன்" என்ற டி. டி. கே.யின் மற்றொரு வாக்கு மூலத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வாதாடினார்.

"அதைத்தான் நானும் சொல்கிறேன். உங்களைப் போன்றவர்கள் துளிக்கூடக் கஷ்டப்படுவதில்லை. கோயில்கள் இல்லாமலே உங்களைப் போன்றவர்களால் இருக்க முடியும். ஆனால் அதே சமயத்தில் தேவைப்படுகிறவர்களுக்குக் கோயில்களை விட்டுத் தரவும் மாட்டீர்கள்!" முடிவாக "ஆலயப் பிரவேசம் நடக்கக் காரணமாயிருந்தவர்களை நான் பாதுகாக்காவிட்டால் நான் பிரதம மந்திரியாக இருந்து ஒரு பயனும் இல்லை" என்றார் ஸி. ஆர்.

திருப்பதியின் கதவுகள் திறக்கவில்லை. டிரஸ்டிகள் எதிர்த்தார்கள். ஆனால் ராஜதானி முழுவதும் பழைமையான சம்பிரதாய வேலிகள் தகர்ந்து கொண்டிருந்தன. பல நூற்றாண்டுகளாய்க் கோயில்களிலிருந்து விலக்கி வைக்கப்பட்டு வந்த சமூகத்தினர்-இரளான மக்கள் தங்கள் கண்ணெதிரே சரித்திரம் நிகழக் கண்டார்கள். தாங்கள் மகத்தான வெற்றி பெற்றிருப்பதை உணர்ந்தார்கள்.

ஆலயப் பிரவேசத்துக்குப் பாதுகாப்புத் தரும் சட்டத்தைக் குறித்து ஸி. ஆருக்கும், 'ரைட் ஆனரபிள்' பட்டம் பெற்றிருந்த ஸ்ரீனிவாச சாஸ்திரிக்கும் இடையே ஒரு சுவாரஸ்யமான வாக்குவாதம் மேலவையில் நடந்தது.

(தொடரும்)

தமிழாக்கம்: **சிதாரவி.**

# மௌனப்புயல்

## 14

ருமாவின் முகத்தில் இன்றைக்கு அதிக சோபை தெரிந்தது. கன்னங்களில் அதிக செம்மை ஏறியிருந்தது. யூனிவர்ஸிடிக்குச் செல்ல பஸ் ஸ்டாப்புக்கு விரைகையில் மெலிதாகப் பாட்டுக் கூடப் புறப்பட்டது.

ரஞ்சனி அவளைப் பார்த்துச் சினேகிதமாகச் சிரித்தாள்.

"ஏய், என்ன சமாசாரம்? கல்யாணம் நிச்சயமாயிடுத்தா?"

எதிர்பாராமல் பிடிபட்ட வியப்புடன் ருமா அவளைப் பார்த்துச் சிரித்தாள்.

"அட, எப்படிக் கண்டுபிடிச்சே?"

"இதைக் கண்டுபிடிக்க அலாதியான கெட்டிக்காரத்தனம் வேணுமா என்ன? உன் மனசிலே இருக்கிற ஒரே ஒரு கவலை இப்ப அதுதானே? எப்பக் கல்யாணம்?"

"டிஸம்பர் மூணாம் தேதி!"

"குட்!" என்றாள் ரஞ்சனி. "கங்க்ராட்ஸ் 'யார்'!" என்று அவள் கையைக் குலுக்கினாள்.

"ஆனா இன்னும் ஒரு மாசத்துக்கு மேலே இருக்கு!"

ருமாவின் முகத்தில் ஒரு மென்மை படர்ந்தது. கண்கள் கனவில் மிதந்தன.

"கிட்டத்தட்ட ஒரு வருஷமாக் காத்திண்டிருக்கோம் ரஞ்சனி! இன்னும் ஒரு மாசம் காத்திருப்பது ஒண்ணும் கஷ்டமில்லே!"

பஸ் ஸ்டாப்பில் பஸ்ஸுக்காகக் காத்திருக்கையில் ருமா எங்கோ தொலைவில் பார்வையைப் பதித்தபடி சொன்னாள்.

"எனக்கு இன்னும் புரியல்லே ரஞ்சனி. என் சொந்த வாழ்க்கை ஏன் எனக்குச் சம்பந்தமில்லாத சக்திகளினாலே பாதிக்கப்படணும்னு!"

ரஞ்சனி சங்கடத்துடன் பேசாமல் இருந்தாள். திடீரென்று ஓர் ஆயாசம் அவளை ஆட்கொண்டது. அம்ருத்ஸர் போய் வந்ததிலிருந்து மனத்தில் ஏற்பட்டுப் போன நிராசையும் கலவரமும் வெளியில் சொல்ல முடியாதபடிக்கு அழுத்திற்று.

"உனக்குத் தெரிஞ்ச அளவுக்குக் கூட எனக்குப் பஞ்சாப் அரசியலைப் பத்தித் தெரியாது ரஞ்சனி. எனக்கு அரசியல்லே இன்டரெஸ்ட் இல்லே. என் எல்லைகள் ரொம்பச் சாமான்யமானவை. ஆசைகள் ரொம்ப எளிமையானவை. எனக்கு அமைதியான குடும்ப வாழ்க்கைதான் வேணும். ஐ வாண்ட் நத்திங் மோர்!"

வாஸந்தி

ரஞ்சனி அவளுடைய கையை நெகிழ்ச்சியுடன் பற்றினாள்.

"உன் ஆசை நிறைவேறும் ருமா! அதைப் பத்திச் சந்தேகமில்லே!"

ருமா பதில் சொல்லாமல் பஸ் வரும் திசையைப் பார்த்தாள். கூச்சத்துடன் சிரித்தபடி சொன்னாள்.

"எனக்கு எல்லார் மேலேயும் கோபம் வரது ரஞ்சனி! என் தாத்தாவுடைய கறுப்பு டர்பன் மேலே, எங்கப்பாவுடைய மௌனத்து மேலே, அர்ஜுனுடைய குடும்பத்துக்கு ஏற்பட்டிருக்கிற பாதிப்பு மேலே... என்னை அறியாம அவர்களுடைய அரசியல் பேச்சிலே நானும் கலந்துக்க ஆரம்பிச்சுட்டேன். உண்மையைச் சொல்றேன். ஐ டோன்ட் லைக் இட்!"

"சரியாகிவிடும் கவலைப்படாதே!" என்றாள் ரஞ்சனி சமாதானமாக. "அகால்தக்தைக் கட்டி முடித்து விட்டார்கள். பயங்கரவாதிகள் எல்லோரும் ஜெயிலிலே இருக்கிறார்கள். பிஸினஸ் உலகம் நார்மலாகி வருவதாகச் சொல்கிறார்கள். முழுசாக நார்மலாகக் கொஞ்ச நாள் ஆகும்தான். மெள்ள மெள்ளச் சரி ஆயிடும்."

பஸ் வந்து அவர்கள் அவசரமாக ஏறிக் கொள்ளும் போது தன் வார்த்தைகளை நினைத்து அவளுக்கே சந்தேகம் வந்தது.

அம்ருத்ஸரில் ஜனங்களின் மனநிலையைக் கண்ட பிறகு அவர்கள் அத்தனை சீக்கிரம் மறந்து விடக் கூடியவர்கள் என்று தோன்றவில்லை. எப்பொழுதாவது சந்திக்கும் பத்திரிகை நண்பர்கள் பஞ்சாபில் இன்னமும் நடந்து கொண்டிருக்கும் கொலைகளைப் பற்றிச் சொன்னார்கள். சீக்கியரின் கோபத்தைப் பற்றிச் சொன்னார்கள்.

அவளுக்கு அலுத்துப் போயிற்று. இந்தக் கோபத்தினால் என்ன சாதிப்பதாக நினைக்கிறார்கள்? பிரிவினையா?

அதைவிட முட்டாள்தனம் வேறு இருக்க முடியாது என்று ஏன் அவர்களுக்குப் புரியவில்லை? இறந்த காலத்திலேயே இருக்கும் சமூகத்தை என்ன செய்ய முடியும்? பழைய சரித்திரத்தின் ஏடுகளைப் புரட்டி அதற்குச் சம்பந்தமில்லாத தற்கால நிகழ்ச்சிகளை ஒப்பிட்டு விடைகளைத் தேடும் மரபை ஏற்படுத்திக் கொண்டு விட்ட ஜனங்கள் யதார்த்தத்துக்கு விழித்துக் கொள்வார்களா?

பொற்கோவிலில் கத்திய சீக்கிய பெண்ணை நினைத்தால் இப்பவும் அதிர்ச்சி ஏற்பட்டது. இப்படிப்பட்ட பிளவு மனப்பான்மை ஏன் ஏற்பட வேண்டும்?

பிரச்னையைப் பற்றி அதிகமாக நினைக்க நினைக்க மனசு அதிகமாகச் சோர்ந்தது. மன்மோஹனே சோர்ந்துவிட்ட மௌனத்தில் தெரிந்தான். அவனைக் காணும் போது பஞ்சாப் அரசியலை ஜாக்கிரதையாகத் தவிர்த்தான். ரிட்விக் கடக்கின் சினிமாவையும் கோர் விடலின் எழுத்தையும் அலசினான். இதைப் பற்றியெல்லாம் பேசாத போது ஏதோ பாரத்தைச் சுமப்பவன் போல் நின்றான். அவன் இப்பொழுதெல்லாம் முன்பு சந்தித்த அளவு தன்னைச் சந்திப்பதில்லை என்கிற நினைப்பு பெரிதாக உறுத்திற்று. ஷௌக்கின் அன்று அமிருத்ஸரில் தன் குடும்பப் பிரச்னையை அவன் எதிரில் ஏன் சொன்னான்? அவன் அதை எதேச்சையாகச் சொன்னான் என்று ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இந்த மறைமுக எச்சரிக்கையினாலேயே மன்மோஹன் சற்று விலகியிருக்கிறானோ என்று பட்டது.

பஸ் ரேஸ்கோர்ஸ் ரோடைத் தாண்டி ராஜாஜி மார்க்குக்குப் போகும்போது ஸஃப்தர்ஜங் தெருவும் பிரதம மந்திரியின் வீடும் தெரிந்தன. காம்பவுண்டுச் சுவருக்கு வெளியே நின்றிருந்த ஸெண்ட்ரியைப் பார்த்ததும் அவனுக்கு மறுபடி ஷௌக்கினின்



நினைவு வந்தது. அவனுடைய வார்த்தை களின் நினைவு மெலிதான பீதியை ஏற்படுத் திற்று.

'இனிமேல் என்ன வேணும்னாலும் நடக்க லாம்.'

ஏதோ நடக்கும் என்கிற எதிர்பார்ப்போ பயமோ தொனித்தது குருசரன் ஸிங்கின் வார்த்தைகளில்; ருமாவின் தாத்தா அணிந்த கறுப்பு டர்பனில்; பாட்டியாவின் பெருமூச் சில்... சீக்கியனைப் பற்றிய ஷௌக்கினின் மனம் திறந்த கணிப்பில்.

பிரதமருக்கு இதைப் பற்றிய பிரக்ஞை இருக்குமா?

இல்லாமலிருக்காது என்று அவள் தனக் குள் நினைத்துக் கொண்டாள். அறிவார்த்தப் பிரக்ஞை நிச்சயம் இருக்கும். ஆனால் ஆத் மார்த்தமாக அதை நம்ப விரும்ப மாட்டார். பாட்டியா சொன்ன மாதிரி 'இதற்கெல்லாம் அப்பாற்பட்ட கொள்கைகள் உள்ளவர் அவர்...'

அதற்கு முன் பஞ்சாபில் இருந்த வன்முறை யையும் ஹிந்து கொலைகளையும் கண்டிக்க வில்லை என்கிற நமைச்சல் அப்பா அதைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் அவளைப் பேச விட முடியாமல் தடுத்தது.

தங்கள் இனத்தைக் கண்டே பயமா, அல்லது இனப் பற்றுதலா?

''என்னைப் போல, ஷௌக்கின் மன் மோஹன் போலப் பட்சபாதமில்லாமல் நினைப்பவர்களும் இருக்கிறோம்...!''

அப்படி நினைப்பவர்களின் குரல்கள் எல் லாம் ஏன் ஒன்றுபட்டு எழும்பவில்லை. சொல்ல வேண்டிய தருணத்தில் சொல்லப் படவில்லையானால் சொல்லுக்கு ஏது மதிப்பு?

ஆனால் அப்படிக் குரல் எழுப்பிய ஜீவன் களின் குரல் வளைகளே அமுக்கப்பட்டு விட்ட புள்ளி விவரங்கள் நினைவில் பசுமை யாக இருக்கும் போது எந்தக் குரல் எழும் பும்? இப்பொழுது ராணுவப் பிரவேசத்தைக் கண்டிக்கும் அறிவு ஜீவிகளின் வார்த்தை




வெளிப்பார்வைக்கு நம்பர் 1, ஸஃப்தர் ஜங் ரோட் மிகப் பாதுகாப்பான கம்பீரத் துடன்தான் தெரிந்தது. வீட்டிற்குள் இருக் கும் பாதுகாப்பை மீறி எதுவும் நேர்ந்து விடாது. ஆபத்து வந்தால் வெளியில்தான் ஏற்படும். விபத்தில் மாட்டிக் கொள்ளப் பிரதம மந்திரியாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. எனக்குக் கூட ஏற்படலாம். மாலை வீட்டிற்குத் திரும்புவேன் என்று என்ன நிச்சயம்?

அவள் சட்டென்று சுய நினைவுக்கு வந் தாள்.'என்ன நேர்ந்து விட்டது எனக்கு'என்று கவலையேற்பட்டது. அமிருத்ஸருக்குப் போய் வந்ததிலிருந்து மனத்தில் ஒரு பிரமை ஏற் பட்டு விட்டாற்போல் தோன்றிற்று. சீக்கிய பாமரர்களின் உணர்ச்சிக் கொந்தளிப்பைக் கண்ட அதிர்ச்சியுடன், இன்னொரு விஷயம் தெளிவு பெறாத குழப்பத்துடன் அடிமனத்தை நெருடிற்று. விஷயம் தெரிந்த படித்த சீக்கி யர்கள், பொற்கோவிலில் ராணுவப் பிரவே சத்தைக் கண்டிக்கும் அளவு தீவிரத்துடன்

களில் ஒரு மறைமுகக் குற்ற உணர்வு இல்லா மல் இல்லை.

இதையெல்லாம் முன்புபோல் மன் மோஹன் ஸிங்கிடம் மனம் திறந்து பேச முடியாதது அவளுக்குப் புதுமையாக இருந் தது.

இனிமேல் சீக்கியப் பாமரர்கள் மதவெறி பிடித்துத்தான் அலைவார்கள் என்று ஏதோ அமானுஷ்யத் தீர்வுபோல் எதிர்பார்த்துக் கொண்டு ஒதுங்கி ஏன் நிற்கிறீர்கள் என்று கேட்க முடியவில்லை. அரசின் கொள்கையை நீங்கள் எல்லாரும் கண்டிக்கக் கண்டிக்கச் சீக்கியர்களின் கோபமும் வெறியும் அதிக மாகத் தூண்டப்படாதா என்று கேட்க முடிய வில்லை... சீக்கியப் பழிவாங்கும் மரபு அதன் பாரம்பர்யத்தோடு, வேர்களோடு ஒட்டாத ஓர் இடைக்காலச் செருகல் என்று உணர்த்த ஏன் அறிஞர்கள் ஒட்டுமொத்த மாக முயலவில்லை என்று கேட்க முடிய வில்லை.

எல்லாரும் ஒதுங்கியிருக்கிறார்கள். பலி

ஆட்டை நடுச்சந்தையில் நிறுத்தி வைத்து—
ஒதுங்கியிருக்கிறார்கள்.

ஏதோ அதன் தலை விதியை அது அனுப வித்தே தீர வேண்டும் என்பது போல— ஒரு யுகசந்தியில் மாட்டிக் கொண்டு திண்டாடும் பலி ஆடு... அடுத்த யுகத்தில் கால் வைக்கப் பார்க்கும் அதை கற்கால மனேவியல்கள் பின்னிழுக்கப் பார்ப்பதை நம்ப விரும்பாத பலி ஆடு...

பஸ் ஒரு குலுக்கலுடன் நின்றது. அவள் மறுபடி தனது எண்ணச் சிதறல்களைப் பிடித் திழுத்து நிறுத்தினள். நான் இத்தனை கவலைப் படுவதினல் ஆகப் போவது எதும் இல்லை என்கிற கையாலாகாத்தன சோர்வு ஏற்பட் டது.

காம்பஸுக்குள் நுழைந்ததுமே பஞ்சாபும் ப்ளுஸ்டார் ஆபரேஷனும் மறந்து போயின. யாருக்குமே நினைவில்லை. வழக்கம் போல் பாடங்கள் நடந்தன. நடக்காத போது லைப்ர ரிகள் அழைத்தன. மாணவ மாணவிகள் காம் பானைக் குடித்தார்கள். 'மஹா போஜ்' நாட கத்தை விமர்சித்தார்கள். 'ஹம் லோக்' ஒரு 'மிடில் க்ளாஸ் ஸோப் ஆப்பரா' என்று பரிகசித்தார்கள். ராக்கேஷ் மல்ஹோத்ரா ஒரு ஸர்தார் பையனின் தோள்மேல் கைபோட்டு அணைத்து ஜோக்கடித்துக் கொண்டிருந்தான்.

மாலை வீடு திரும்புவதற்குள், 'என் பயங் கள் அநாவசியமானவை' என்கிற சமா தானத்துக்கு ரஞ்சனி வந்து விட்டாள். 'என் மனதை நான் இளக்கிக் கொள்ள வேண்டி யது மிக அவசியம்' என்று தனக்குள் சொல் லிக் கொண்டாள். நாளை சுரேஷுடன் சாகுந் தலம் தியேட்டரில் நடக்கும் சார்லி சாப்ளின் படத்துக்குப் போக வேண்டும் என்று தீர் மானித்துக் கொண்டாள்.

இரவு படுத்ததும் சுலபமாகத் தூக்கம் வந்தது. அக்டோபர் மாதக் கடைசி தினம் குளுகுளுவென்று விடிந்தபோது உலகம் ரம்யமாகத் தோன்றிற்று. எட்டு மணிக்கு அழைப்பு மணி அடித்தது.

பக்கத்து ஃப்ளாட்டில் இருக்கும் காந்தா பந்த். டீ.வி.யில் வேலை பார்ப்பவள் நின் றிருந்தாள் கையில் வீட்டுச் சாவியுடன். "என் கணவர் வெளியில் போயிருக்கார். அவர் வந்தால் சாவியைக் கொடு. எனக்கு அவசரமா பி. எம். வீட்டுக்குப் போகணும்னு போன் வந்திருக்கு" என்றாள்.

"பி. எம். ஒரிஸ்ஸாவுக்குப் போயிருக்கார் போயிருக்கே?" என்றாள் ரஞ்சனி.

"நேத்து ராத்திரி வந்து விட்டாராம். அவரைப் பத்தி டீ. வி. ஃபிலிம் எடுக்க பீட்டர் சைஸ்தினல் வந்திருக்காராம். கொஞ் சம் மேக்கப் போடணும். இப்ப எந்த மேக் கப் மேனும் டீ. வி. ஸ்டேஷனுக்கு வந்திருக்க மாட்டான். நான் யாரையாவது தேடிப் பிடிச்சு அழைத்துக் கொண்டு போகணும்!"

"ஆல் தி பெஸ்ட்!" என்றாள் ரஞ்சனி தன்னையறியாமல்.

(தொடரும்)

# நினைவில் ஒரு திரைப்பாடல்

## வாசகர் பங்கு

### அதுதான் காதல் சந்நிதி!

திருமணமான நாலாம் மாதமே பிறந்த வீட்டுக்கு அனுப்பப்பட்டேன். ஒரு வருடம் கழித்து தகராறு தீர்ந்து என்னை அழைத்துப் போக கணவர் வந்தபோது மனம் மகிழ்ச்சியில் திளைத்தாலும் கண்கள் கண்ணீரில் கரைந்தன; வாய் பேச்சிழந்தது. அப்போது அருகில் ஒலித்த ''பாலும் பழமும்'' படத்தின் பாடல் வரிகள்:

''பிரிந்தவர் மீண்டும் சேர்ந்திடும்போது
அழுதால் கொஞ்சம் நிம்மதி;
பேச மறந்து சிலையாய் இருந்தால்
அதுதான் காதல் சந்நிதி!''

— ஜி. நீலா, டோம்பிவில்லி, தாணா.

### திருநாள் வாராதோ!

''ஊரெங்கும் மாப்பிள்ளை ஊர்வலம்;
வீடெங்கும் மாவிலைத் தோரணம்;
ஒருநாள், அந்தத் திருநாள் உந்தன்
மணநாள் தான் வாராதோ!''

'சாந்தி' படத்தின் இப்பாடலை வானொலியில் கேட்கும் போதெல்லாம் முப்பது வயதாகியும் உடல் ஊனத்தின் காரணமாகத் திருமணமாகாமல் வாழும் என் மாமன் மகளும் அவள் பெற்றோர் தம் துயரும்தான் என் நினைவுக்கு வரும். சோகத்தில் ஆழ்ந்து போவேன்.

—சு. கீதா, சென்னை—10.



### மறக்கத் தெரியாதா?

என் தந்தை இறந்த சில நாட்களில் திடீரென்று என் அண்ணன் அண்ணியை அழைத்துக் கொண்டு எங்களிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் வேறு ஊருக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு போய்விட்டார். எங்கள் தாயார் வாழ்க்கையில் எதிர் நீச்சல் போட்டு எங்களை வளர்த்தாள் என்றாலும் நாங்கள் அடிக்கடி நினைவு கூர்வது அண்ணனையும் பின்வரும் திரைப்பாடலையும்தான்:

''நினைக்கத் தெரிந்த மனமே—உனக்கு
மறக்கத் தெரியாதா?
பழகத் தெரிந்த உயிரே—உனக்கு
விலகத் தெரியாதா?''

—எஸ். சரஸ்வதி, சென்னை—44.

### ஆயிரம் பார்வையிலே உன் பார்வை

என்னுடன் பணிபுரிந்த ஒரு பெண்ணும்



நானும் ஒருவரை ஒருவர் மனதார விரும்பினோம். அடுத்த இருக்கையில் அமர்ந்து பணியாற்றும் அவள் நிமிர்ந்து பார்த்துப் புன்னகைக்கும் போதெல்லாம் நானும் சொல்லி வைத்தாற்போல் அவளை ஏறிட்டுப் பார்ப்பேன். விதி வசத்தால் வாழ்க்கையில் இணைய முடியவில்லை நாங்கள்.

''ஓராயிரம் பார்வையிலே—உன்
பார்வையை நான் அறிவேன்''

என்ற ''வல்லவனுக்கு வல்லவன்'' படப்பாடலைக் கேட்கும் போதெல்லாம் அவளுடன் பழகிய நாட்கள் நினைவுக்கு வந்து என் கண்கள் குளமாகும்.

— ந. மனோகரன், திருவள்ளூர்.

### புத்தியுள்ள மனிதரெல்லாம்...

எஸ். எஸ். எல். ஸியில் 600க்கு 420 மார்க் பெற்றேன். 1975ல் ஆங்கில

இலக்கியத்தில் பட்டம் பெற்றேன். ஆண்டுகள் பத்தாகியும் இன்னும் வேலை கிடைக்கவில்லை. வேலைக்கான பல தேர்வுகள் எழுதி வெற்றி பெற்றும் வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்படவில்லை. என்னை விடத் தகுதியில் குறைந்த வேறு யார்யாருக்கோ அந்த வேலைகள் கிடைப்பதைப் பார்க்கிறேன். இந்த நிலையில் சந்திரபாபு பாடிய இந்தப் பாடல்தான் எனக்கு ஆறுதல் அளித்துக் கொண்டிருக்கிறது:

''புத்தியுள்ள மனிதரெல்லாம்
வெற்றி காண்பதில்லை;
வெற்றி பெற்ற மனிதரெல்லாம்
புத்திசாலியில்லை!''

—என். ரங்கசாமி, நெகமம்.



## அம்மாடி! எம்புட்டு தூரம்...

டாக்ஸிகாரர் ''இதற்கு வேறு வண்டியைப் பார்'' என்றார். ஏற்கனவே கனத்துக் கொண்டிருந்த என் மனம் வெடித்துவிடும் போலிருந்தது. 'இனி என் பிள்ளையை எங்கே, எப்போது தூக்கப் போகிறேன்?' என்று என்னை நானே சமாதானப்படுத்திக்கொண்டு உயிரற்ற என் நாலு வயது மகனைத் தோளில் தூக்கிக் கொண்டு ஆஸ்பத்திரியிலிருந்து புறப்பட்டேன். மனைவியும் நடந்தே உடன் வர நாலு கிலோமீட்டர் தொலைவிலிருந்த வீட்டுக்குவந்துசேர்ந்தேன். வழிநடக்கையில், என் மகன் ஏதோ விளையாட்டாக அடிக்கடி பாடும் சினிமாப்பாடல் நினைவு வந்தது.

''அம்மாடி எம்புட்டு தூரம் நடக்குறது,
அன்னுடம் எம்புட்டு பாரம் சுமக்குறது!

'நீ பாரமில்லேடா, கண்ணு! வீடும் தூரமில்லேடா, செல்வமே' என்றுதோளில்கிடந்த மகனிடம் மானசிகமாகப் பேசியபடியே துக்கத்தை அடக்கிக் கொண்டு நடந்தேன்.

— ஜி. திருப்பதி, திருக்கோவிலூர்.

## விதி செய்த சதியோ?

''விதி செய்த சதியோ — அத்தான்
நிதியெல்லாம் நீயே, அத்தான்!
சதிபதியாய் வாழ, அத்தான்
கதியில்லாமல் போனேன் அத்தான்!''

1960 செப்டம்பரில் சேலத்தில் இந்தப் பாடலை சுமங்கலி திரைப்படத்தில் கேட்க நேர்ந்தது. சுமார் இரண்டு வருஷங்களுக்கு




முன் என் மாமன் மகளை மணம் புரிய மறுத்துவிட்டிருந்த எனக்கு அவளே எதிரில் நின்று முறையிடுவது போல் தோன்றியது. உடனே என் மனம் மாற 21.11.60ல் எங்கள் திருமணம் இனிதே நடைபெற்றது.

—எஸ். வி. ரமணன், தஞ்சாவூர்.

## நடையா? இது நடையா?

கல்லூரியை விட்டு பெண்கள் எப்போது வெளியே வருவார்கள் என்று காத்திருக்கும் ஒரு ரௌடி கூட்டம், ''நடையா? இது நடையா?'' என்று பாடி பரிகசிக்கும். புதிய மாணவி ஒருத்தி இதைப் பொறுக்காமல் தந்தையிடம் புகார் செய்ய, போலீஸ் அதிகாரியான அவர் மஃப்டியில் வந்து ரௌடிகளை மடக்கி போலீஸ் ஸ்டேஷன் நோக்கி இழுத்துச் சென்றார். அப்போது அந்தப் பெண் குறும்பாக,

''நடையா, இது நடையா?'' என்று மெல்லிய குரலெடுத்துப் பாடினாள்!

— பி. வி. ஜெயந்தி, சென்னை

## அன்னையைப் போல் தெய்வமில்லை...

சிறு வயதில் தாயைப் பறி கொடுத்தவன் நான். தாய்ப்பாசம் பற்றி அறியாதவன். எனவே, ''அன்னையைப் போலொரு தெய்வமில்லை'' என்ற பாடலைக் கேட்கும் போதெல்லாம் என் கண்கள் குளமாகிவிடும். குறிப்பாக,

''நாளெல்லாம் பட்டினியாய் இருந்திடுவாள் — ஒரு
நாழிகை நம்பசி பொறுக்கமாட்டாள்''

என்ற வரிகள் அன்னை இல்லாக் குறை என்னைப் பெரிதும் வாட்டக் காரணமாகின்றன.

—பி. பி. சௌந்திரபாண்டியன்,
இராஜபாளையம்.

## கண்ணீர் உப்பிட்டு...

நான் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் தமிழகத்தில் கடும் பஞ்சம். ஏழைமை காரணமாக ஒரு வேளை சாப்பாடுதான். ஒருநாள் சாப்பிடும்போது ஒருதுளி கண்ணீர்சாதத்தில்விழுந்துவிட்டது. உடனே, ''பூஞ்சிட்டு கன்னத்தில்....'' என்ற பாடலில் வரும் ஓர் அடி என் நினைவுக்கு வந்தது:



''கண்ணீர் உப்பிட்டு, காவிரி நீரிட்டு...''

ஏழைமையை அத்தனை அழகாக உணர்த்தும் வரி!

— தி. திருச்செல்வம், திருநெல்வேலி.

## ஏன் பிறந்தாய் மகனே...

எதிர் வீட்டு நண்பர் வேலையை இழந்து விட்டார். வீட்டோடு இருந்தார். ஆறுமாதக் குழந்தை அவருக்கு. தமக்கு வேலையில்லாததால் மனைவிக்கு உதவுவார். குழந்தையைத் தொட்டிலில் கிடத்தி ஆட்டுவார்.

''ஏன் பிறந்தாய் மகனே ஏன் பிறந்தாயோ
நான் பிறந்த காரணத்தை நானே அறியு முன்னே
(ஏன் பிறந்தாய்....)''

என்று தாலாட்டுப் பாடுவார். எனக்குத் துக்கம் துக்கமாய் வரும். எனக்கே இப்படியென்றால் அவர் மனம் என்ன பாடுபடும் என்று எண்ணிக் கொள்வேன்.

— ஏ. ஜி. குருசாமி, மதுரை—10.

## சமரசம் உலாவும் இடமே...

இலங்கைக் கலவரத்தில் சொத்துக்களை இழந்து அகதிகள் முகாமில் முதலாளி தொழிலாளி என்ற பேதமின்றி அனைவரும் ஒன்றாய் இருந்தோம். பழைய வசதி செளகரியங்களை பல சமயம் எண்ணிப் பார்த்து ஏங்குவோம். அத்தகைய ஒரு தருணத்தில் ரேடியோவில்,

''சமரசம் உலாவும் இடமே....''

என்ற கண்ணதாசன் பாடல் ஒலித்தது. ஏழை பணக்காரன் என்ற பேதமற்ற அகதிகள் முகாமைப் பாடல் பிரதிபலிப்பதாய்த் தோன்றியது. சிரித்து விட்டோம். ஆதென்னவோ தெரியவில்லை. அது முதல் மனச் சுமை குறைந்து விட்டது போல்தான் இருக்கிறது!

— ரா. ஜோதி ரஞ்சனி, திருச்சி.

## பாட்டும் நானே...

என் திருமணத்தில் நலங்கின்போது,

''பாட்டும் நானே பாவமும் நானே''

என்று பாடினேன்.
பாவம் என்று ''பா''வில் அழுத்தம் கொடுக்காமல் பாடி விட்டேனோ என்னவோ என் கணவர், ''இன்றிலிருந்து நான்தானே பாவம்!'' என்றாரே பார்க்கலாம். அனைவரும் 'கொல்'லென்று சிரிக்க...நான் முகம்சிவக்க..

— சத்யா ரமணன், புதுதில்லி.

## நலந்தானா?

என்னைப் பெண் பார்த்து விட்டுப் போன வருக்குவழியில்விபத்து ஏற்பட்டுகைமுறிந்து விட்டது. 'அதிர்ஷ்டக் கட்டை பெண் வேண்டாம்' என்று அவ்வீட்டினர் முடிவு கட்டி விட்டனர். சில தினங்கள் சென்று என் சிநேகிதி கல்யாணத்துக்குப்போயிருந்தேன். அங்கு மாப்பிள்ளைத் தோழன்.... அவரேதான்! கையில் கட்டுடன் நின்று கொண்டிருந்தார். நலங்கின்போது நான் பாடினேன்:

''நலந்தானா? நலந்தானா?
உடலும் உள்ளமும் நலந்தானா?''

பாடியதற்குப் பலன் இருந்தது. சில தினங்களில் அவர் தம் தகப்பனாரைச் சரிக்கட்டி எங்கள் கல்யாணத்துக்குச்சம்மதிக்கச்செய்து விட்டார்! என் கழுத்தில் தாலி கட்டியபோது என் காதோடு, ''நலந்தானா?'' என்று பாடவும் செய்தார்!

— மீனாக்ஷி ராமச்சந்திரன், சென்னை—4.

## நம்பிக்கை கொள்வாயடா!

ஆபரேஷனுக்காக மதுரை ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருந்தேன். 'பிழைக்க மாட்டேன்' என்று தோன்றிக் கொண்டேயிருந்தது. குழந்தைகளை நினைப்பதும், கடவுளை வேண்டிக் கொள்வதுமாய் சஞ்சலப் பட்டுக் கொண்டிருந்தேன். அச்சமயம் ரேடியோவில் சீர்காழியின் குரல் ஒலித்தது:

''நாளைப் பொழுது உந்தன் நல்ல பொழுதாகுமென்று
நம்பிக்கை கொள்வாயடா—தோழா!''

ஏதோ அசரீரி மாதிரி எனக்குத் தோன்றியது. தைரியம் அடைந்தேன். ஆபரேஷனும் வெற்றி!

— பி. சுப்புலக்ஷ்மி, காரைக்குடி.

**புளோபிளாஸ்ட்வழங்கும்வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

**ஏ. ஜி. குருசாமி,**
**50, ஆரப்பாளையம் மெயின் ரோடு,**
**மதுரை—625 010.**



# ஆகாச

## 27

அரவிந்தன் மின்சாரப் பித்தானை அழுத்த ஒலி சங்கீதமாகக் கேட்டது. உள்ளே தாரக்ராம் என்ன செய்து கொண்டிருப்பார்? அவர் தம் கம்பெனி காரியமாகச் சென்னை வரவில்லை என்பதை அவன் ஏற்கெனவே மானேஜர் ஆராமுதன் மூலம் தெரிந்து கொண்டிருந்தான். வசுமதியின் மூலம் அவர் அவளைச் சந்தித்ததும் தெரியும். இதுவரையில் அவர் அவனுடன் தொலைபேசி மூலம் கூடத் தொடர்பு கொள்ளவில்லை. தாரக்ராம் எதற்காக, யாரை முன்னிட்டுச் சென்னை வந்திருக்கிறார்? இரண்டு நாட்களாகத் தங்குகிறார்?

கதவு இன்னும் திறக்கவில்லை.

ஒருவேளை குளித்துக் கொண்டிருப்பாரோ? பகல் பன்னிரண்டு மணிக்கு யாராவது குளிப்பார்களா என்ன?

திடீரென்று அரவிந்தனுக்கு மாயாவின் நினைவு வந்தது. அவள் எப்போது வேண்டுமானாலும் குளியலறைக்குச் செல்லுவாள். மாயாவும் வசுமதியும் இப்போது என்ன செய்கிறார்கள். காலை பத்து மணிக்கு வசுமதி வந்ததால் ஏற்கெனவே திட்டமிட்டபடி அவனால் மாயாவை அழைத்துக்கொண்டு வர முடியவில்லை. அவளுக்குத் துணையாக வசுமதியை ,வைத்துவிட்டு அவன் மட்டும், இப்போது வந்திருக்கிறான். அவன் தமாஷாக அவளிடம் பேசியது இப்போது நினைவுக்கு வர, திடீரென்று ஒரு பயம் கவ்விக் கொண்டது. அவனை வசுமதி அடைய வேண்டுமென்றால் அதற்கு ஒரே வழி தான் அவளைப் பொறுத்தவரையில் இருக்க முடியும்; மாயாவை அப்புறப்படுத்த வேண்டும். இந்த உலகில் மாயா எனும் ஒரு பெண் — அவனுடைய மனைவி இல்லாமலே போய்விட வேண்டும். இதைத்தான் வேடிக்கையாக அவன் வசுமதியிடம் கூறியிருந்தான். வசுமதி திடுக்கிட்டுப் போனாள். ஆனால் அதே சமயத்தில் அவளுடைய முகத்தில் ஆழப் பதிந்திருக்கும் நம்பிக்கை பிரதிபலிப்பதாகத் தோன்றியது.

வசுமதியால் மாயாவுக்கு ஏதேனும் ஆபத்து வரக்கூடுமோ? நிச்சயமாகக் கொலை முயற்சியில் வசு இறங்க மாட்டாள். ஆனால் வேறு பலவிதங்களில் மாயா அவளிடம் கஷ்டப்படலாமே?

ஏன் அவன் மாயாவை வசுமதியின் பொறுப்பில் விட்டுவிட்டு வந்தான்? என்ன முட்டாள்தனம்!

அவன் தன்னையே மறந்த நிலையில் நின்ற போது, திடீரென்று ஒரு மென்மையான குரல் அவனைத் தாக்கி எழுப்பியது.

''வாப்பா அந்து... உன்னைக் கொஞ்ச நேரம் நிக்க வச்சதுக்கு ரொம்ப ஸாரி...''

அரவிந்தன் பதில் சொல்லாமல் அவரைப் பின் தொடர்ந்தான். அவர் உட்கார்ந்தார்.

''ஏதானும் சாப்பிடறியா?''

''சௌக்கியமா இருக்கிறீர்களா?''

''ஓ யெஸ்... ரொம்ப சௌக்கியம். மாளிகையிலே வாசம். ஆகாய மார்க்கமா சஞ்சாரம்... நினைச்சா குடிக்க ஃபாரின் விக்கர்... ஒரு பெரிய கம்பெனியின் சேர்மன்... சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்?''

அவருடைய குரலில் விரக்தி ஒலித்தது.

''ரெண்டு நாளா மெட்ராஸ்லே இருக்காப்லே இருக்கு...''



பி.வி.ஆர்.

''ஆமாம்... என் தலை எழுத்து பெத்த பெண் இந்த ஊரிலே இருந்தாலும் நான் ஓட்டல்தான் கதின்னு கிடக்க வேண்டியிருக்கு.... அது சரி என்ன சாப்பிடறே?''

''நான் சீக்கிரம் போகணும்...''

''ஒரு நொடியிலே வரும்.''

''எதுவும் வேண்டாம்.''

''உன் இஷ்டம்.''

''நீங்க மாயாவைப் பத்தி இன்னும் ஒரு வார்த்தை விசாரிக்கவில்லே,'' என்றான் அரவிந்தன்.

''தேவையில்லே... அவ யார்கிட்டே இருக்கா? உங்கிட்டே.... நிச்சயமா நன்னாத்தான் இருப்பா...''

''அது எப்படி அவ்வளவு நம்பிக்கை...'' சிரிக்காமல் கேட்டான் அரவிந்தன்.

''என் பலவீனங்களை விட பலம்தான் எனக்கு ஜாஸ்தி. ஒருவனையோ, ஒருத்தியையோ, சில நிமிடங்களில் எடை போட்டு விடுவேன். என் மாயா இப்ப உன்கிட்டே ரொம்ப சௌகரியமா, சௌக்கியமா நாளுக்கு நாள தேறிண்டு வர்ரா!''

''வசுமதி சொன்னாளா?''

''அவளை நான் சந்திப்பதை அவ உங்கிட்டே சொன்னாளா?''

''சொன்னா.''

''யெஸ்.... சொல்லியிருப்பா. ஏன்னா ஒரு காலத்திலே அவ உன்னோட பழகினவள். ஆனா மாயா எப்படிப்பட்ட நிலையில் இருக்காங்கறதைத் தன் வழியிலே சொல்லி என்னைக் குழப்பப் பார்த்தா. ஆரம்பத்திலே குழம்பித்தான் போனேன்... ஆனா, ஆனா அவ மேலே மேலே ஒரே பாயின்ட்டை அடிச்சு அடிச்சுச் சொன்னப்போ என்னை நம்ப வைக்க ட்ரை பண்ற மாதிரிப் பட்டது. அவ வாயிலிருந்தே சில உண்மைகள் வெளியானப்போ நீ எப்படிப்பட்டவன் என்பதையும் புரிஞ்சுண்டேன்... ஐ தாங்க் யூ அந்து.''

''நீங்க என்ன சொல்றீங்கன்னு எனக்குப் புரியலே சார்.''

''நான் இன்னும் உனக்கு சாரா? நான் உன் மாமனார். நீ வாய் நிறைய மாமான்னு கூப்பிட்டா என் காதுக்கு இதமா இருக்காது?''

''ட்ரை பண்றேன் சார்,'' என்ற அரவிந்தன், ''வசுமதி உங்ககிட்டே என்ன சொன்னா?'' என்றான்.

''மாயாவைப் பத்தித் தலைகீழா விவரிச்சா. நாளுக்கு நாள் மோசமாயிண்டே வர்றதாம். நான் உடனடியா டாம்பேக்கு அழைச்சுண்டு போகலேன்னா, தீரக் கூடிய வியாதி கூடத் தீராமப் போயிடுமாம். உங்கிட்டே அவஸ்தைப் படறாளாம். முன்னைவிட பயங்கரமாப் போயிடுத்தாம் அவ நிலைமை.''

அரவிந்தன் பதில் ஏதும் சொல்லவில்லை. வார்த்தைகளை வாங்கி மனத்தில் பூட்டி வைத்தான்.

''அந்து, என் பெண்ணைப் பற்றிய ஒரு உண்மையை நான் இப்ப சொல்லிடறேன்'' என்று எதிர்பாராத இடத்திலிருந்து தாரக்ராம் ஆரம்பித்தார்.

''தேவை இல்லை, எனக்குத் தெரியும்.''

''உனக்குத் தெரிந்திருக்க நியாயமேயில்லை. என்னைத் தவிர இன்னும் ஒரே ஒருத்திக்குத்தான் தெரியும். அவளும் போயிட்டா.''

''அந்த உண்மை மாயாவுக்குத் தெரியும் இல்லையா?''

''அதனாலே?''

''எனக்குத் தெரியும்.''



''தெரிஞ்சிருக்கவே முடியாது. எங்களுக்குத் தெரிய வைச்சதே ஒரு பிரபல சைக்கியாட்ரிஸ்ட். மாயாவின் உள் மனத்தை விஞ்ஞான முறையிலே ஊடுருவி...''

''இதோட நிறுத்திக்குங்க சார்... மலபார் ஹில்ஸ் ஹாங்கிங் கார்டன்ஸ் சம்பவம் எனக்கும் தெரியும்.''

தாரக்ராம் திகைப்பில் இருக்கையை விட்டு எழுந்தார்.

''அந்து!''

''என் மனைவி மாயா நிச்சயமாக எல்லாப் பெண்களையும் போல வாழ வாய்ப்பு இருப்பதாக நான் நம்புகிறேன். ஆனால் இப்ப ஒரு குறுக்கீடு இருக்கு. அது நீங்கி விட்டால் அவள் பூரண குணமாயிடுவா...''

''என்ன குறுக்கீடு அந்து? சொல்லு... லட்சம் லட்சமா செலவானாலும் சரி, நான் அதைத் தகர்த்து எறிகிறேன்.''

''நீங்கள் என் குடும்ப விஷயத்தில் தலையிடக் கூடாதுன்னு ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன் சார். ஆனா நீங்க மெட்ராஸ் வந்ததுமே குறுக்கிட ஆரம்பிச்சுட்டீங்க!''

''கிடையாது... எப்படிச் சொல்றே...?''

''முதல்லே வசுமதி. அப்புறம், மானேஜரின் மனைவி ரங்கம்.''

தாரக்ராம் காற்று இழந்த பலூன் போலானார். மிஸர்ஸ் ஆராமுதன் மாயாவைப் பார்க்க ஏற்பாடு செய்ததற்குக் காரணம் தாம்தான் என்று எப்படி இந்த அரவிந்தன் புரிந்து கொண்டான்? அவள் ஏதாவது உளறி விட்டாளா?''

''இந்த மூணு மாசத்திலே ஒரு தடவை கூட மாயாவை எட்டிப் பாராத மிஸர்ஸ். ஆராமுதனுக்கு எப்படி சார் திடீர்னு அவ பேர்லே அக்கறையும் கரிசனமும் முளைக்க முடியும். வெள்ளிக்கிழமை, பிரார்த்தனை, கொழுக்கட்டை! இதெல்லாம் சினிமா நாடகத்துக்கு ஒத்து வரலாம் சார், நடைமுறை வாழ்க்கைக்கு வராது.''

''ஐ'ம் சாரி.''

''ஆனா இதனாலே உங்க பேர்லே எனக்குக் கோபம் வரலே... ஏன்னா பாசம் எல்லாச் சக்திகளையும் முறியடிக்கும்.. எனக்கு இருக்கிற ஒரே கோபம் நீங்க எங்கிட்டே நேர்மையா நடந்துக்கலேன்னுதான்.''

''எப்படிச் சொல்றே, அந்து?''

''ஏன் முடிஞ்ச கதை, பழைய கதைக்குப் போகணும் சார். மேனேட்டுப் பயிற்சிக்கு அனுப்பறப்பவே, உங்க மனசிலே திட்டம் உருவாயிடுத்து... அப்ப எனக்கு வயசு இருபத்திரெண்டு முடிஞ்சிருந்தது. மாயாவுக்குப் பதினஞ்சு வயசு. அவ மனநிலை மாறினப்புறம்தான் என்னை நீங்க வெளிநாடு அனுப்பிச்சீங்க. திரும்பி வந்தப்புறம் ஏழு வருஷம் தொடர்ந்து கம்பெனியில் வேலை செய்யணுங்கிற நிபந்தனையை விதிச்சு காண்ட்ராக்டிலே கையெழுத்து வாங்கினீங்க... இது மறைமுகமான பயமுறுத்தல்னு எனக்கு அப்பத் தெரியாமப் போச்சு.''

''ஐ'ம் ஸாரி.''

''என் ஐ. ஐ. டி. படிப்பு முடிஞ்ச கையோட நீங்க மாயாவை நான் கலியாணம் செய்ஞ்சுக்கணும்னு சொல்லியிருந்தா மறுவார்த்தை பேசாம நான் தாலியைக் கட்டியிருப்பேன். ஏன் தெரியுமா? அப்ப நான் முழுக்க முழுக்க உங்களுக்குக் கடமைப்பட்டிருந்தேன். கோமளி மாமியின் சிரிச்ச முகத்தை நான் என்னிக்கும் மறந்தது கிடையாது...என் அப்பா பிணமாக் கிடக்கறப்ப, நீங்க என் முதுகைத் தடவி,'நான் உன்னை மேலே படிக்க வைக்கிறேன்'னு ஆறுதல் சொன்னீங்க. இது உங்க சுயநலத்தாலே இல்லே... என் அப்பாவுடன் இருந்த நட்பினாலே... ஆனா, ஆனா நீங்க பிற்காலத்திலே என்னை உங்க வசமாக்கிக்கத் திட்டம் போட்டீங்க... இது..இது..''

''அந்து, நான் உங்கிட்டே மனசார மன்னிப்புக் கேட்கிறேன். மத்த கம்பெனிக்காரங்களோட சாதுரியமாப் பேசறதோ நடந்து கொள்றதோ வியாபாரத் தந்திரம்... என் பெண்ணோட கலியாணத்தையும் நான் வியாபார ரீதியில் பார்த்து விட்டது பெரிய தப்பு! என்னை மன்னிச்சுடு, அந்து.''

''நான் வரேன் சார். என் மனைவி மாயா— அதாவது உங்க பெண் மாயா — வீட்டிலே நான் கூட இல்லாம இருக்கா... நான் வரேன்.''

''அந்து!''

''யெஸ் சார்!''

''நான் என் பெண்ணை ஒரு தடவையாவது பார்க்கலாமா?''

''இத்தனை நான் பொறுத்த நீங்க இன்னும் எழெட்டு நாட்கள் பொறுக்க மாட்டீங்களா?''

''நான் இங்கேயே இருக்கட்டுமா, அந்து?''

''நீங்க பாம்பே போங்க சார். ராஜம்மாவுக்கும் மாயாவைப் பார்க்கணும்கற ஆசை இருக்கலாம் இல்லியா?''

தாரக்ராம் கெட்டிக்காரர். புரிந்து கொண்டார்.

''அந்து, நீ எனக்கு மாப்பிள்ளை இல்லே. ரங்கன் புள்ளை இப்ப என் புள்ளையாயிட்டான்!''

அரவிந்தன் பதில் கூறாமல் நகர்ந்து கதவைத் திறந்தான். அதேசமயம் ஆராமுதனுடைய நடுங்கும் விரல் மின்சாரப் பொத்தானை அழுத்தத் தயாராக இருந்தது.

ஒருவர்: ''யோவ்...! தலைப்பாகையை எடுய்யா! படம் தெரிய மாட்டேங்குது...!''

தலைப்பாகைக்காரர்: ''நல்லதாப் போச்சுன்னு நினைச்சுக்க — படம் படு போர்...!''

—எஸ். என். மாடசாமி.



''குட் ஆஃப்டர்நூன், மிஸ்டர் ஆராமுதன்.. எங்கே இவ்வளவு தூரம்? சேர்மனுக்குக் கொழுக்கட்டை சமர்ப்பணம் செய்யறதா பிரார்த்தனையா?''

''ஹெஹ்ஹே... அதெல்லாம் ஒண்ணுமில்லே அரவிந்தா... சரியா ஒரு மணிக்கு என்னை வரச் சொன்னார் அவ்வளவுதான்.''

''அதாவது உங்க ஒய்ஃப் என் வீட்டுலே என்ன பார்த்தா எப்படிப் பார்த்தாங்கறதையெல்லாம் ரிபோர்ட் பண்ண வரச் சொன்னாரா?''

''என்ன அரவிந்தா, நீயா இப்படிப் பேசறே...'' என்றார் ஆராமுதன்.

''ஓய், நீர் கம்பெனியின் பிராஞ்ச் மானேஜரா என்ன வேணும்னாலும் பேசும். என் வேலையைப் பத்தி ரிபோர்ட் பண்ணும். நான் கவலைப்படவில்லே... ஆனா என் குடும்ப விஷயத்தை அலசினீர், அவ்வளவுதான்! உமக்கு கான்பூருக்குக் கூட டிரான்ஸ்ஃபர் கிடைக்காது! லட்சம் லட்சமா கொழுக்கட்டையை உங்க ஒய்ஃப் பண்ணிப் போட்டாலும்...''

''சபிக்காதே அரவிந்தா!''

அவா என் மாமனார். நான் ஒரு மூச்சு விட்டால் உம்ம கதி என்னவாகும் தெரியுமா?''

''தெரியும். தூசியா பறந்து போயிடுவேன்.. தயவு பண்ணி மூச்சு விடாதே.''

''சரி சரி உள்ளே போங்க.''

''என் பெண்டாட்டிக்கு உன் ஆம்படையானைப் பத்தி ரொம்ப நல்ல அபிப்பிராயம்! இவனுக்குப் பைத்தியம்னு யார் சொன்னான்னு என்னைக் கேக்கறா!''

''அதோ உள்ளே இருக்காரே, அவர்தான் சொன்னார்னு அவ கிட்டே சொல்லும்!''

அரவிந்தன் மறுகணம் மின்தூக்கிக்கு ஓடினான்.

* * * * *

அரவிந்தன் வீட்டை அடைந்த போது பிற்பகல் மணி ஒன்றரை.

இதுவரை அவன் உணர்ந்தறியாக நிசப்தம் நிலவுவதாகப் பட்டது.

கதவு உள்ளிருந்து தாளிடப்படவில்லை.

திறந்தான். பிரவேசித்தான்.

அவன் கண்ட காட்சியில் அவனுக்கு மூர்ச்சை வரும் போல இருந்தது.

(தொடரும்)

## அருள்வாக்கு

இக லோகத்துக்கு ராஜா (ராஜாங்கம்) மாதிரிப் பரலோகத்துக்குக் குரு என்று சொன்னேன். நேராகப் பரலோகத்தைக் காட்டிக் கொடுக்கிற ஸந்நியாச ஆசிரம குருவைப் போலவே, இதற்கு ஆதியில் அக்ஷராப்யாஸம் போட்ட வித்தியாப்யாஸ குருவும் முக்கியமானவர் என்று சொன்னேன். ராஜாங்கத்துக்கு சேவை செய்கிறோமல்லவா? வரி கொடுக்கிறோமல்லவா? இப்படியே ஆரம்ப ஆசாரியர், அந்திம ஆசாரியர் இரண்டு பேருக்கும் பண்ண வேண்டும். பணிவிடை புரிய வேண்டும். தக்ஷிணை தர வேண்டும். நாம் ஒருத்தருக்கு ஒன்றைத் தராமல் அவரிடமிருந்து மட்டும் பிரயோஜனத்தை அடைந்து விட முடியாது. எந்த வஸ்துவானாலும் அதற்கு விலை கொடுத்து வாங்கினால்தான் நம்மிடம் நிலைத்து நிற்கும். சந்நியாஸ குருவுக்கு தக்ஷிணை என்று அதிகம் வேண்டாம். பணிவிடையே முக்கியம். வித்யாப்யாஸ குருவுக்கு இரண்டும் வேண்டும். அவருக்குக் குடும்பம் உண்டு. அதற்கு பிக்ஷாசர்யம் செய்து பெற்று வந்த அன்னம் மட்டும் போதாது. இந்தக் குரு யக்ஞாதி கர்மாநுஷ்டானங்கள் பண்ண வேண்டியவர். எனவே இதற்கு வேண்டிய திரவியத்தை அவருக்கு தக்ஷிணையாகத் தர வேண்டும். இப்போது படிக்கிற காலத்திலேயே பீஸ் கட்டுகிற மாதிரி தக்ஷிணை கொடுத்தால், 'நாம் கொடுத்துத்தான் வாத்தியார் பிழைக்கிறார்' என்ற திமிர் வந்து குரு பக்தி போய்விடும். இதனால்தான் ஒருவன் கல்வியை முடித்துவிட்டு, குருகுலவாஸத்தைப் பூர்த்தி பண்ணிவிட்டுத் திரும்புகிற போதுதான் அவர் கேட்கிற தக்ஷிணையைத் தர வேண்டும் என்று சாஸ்திரத்தில் வைத்திருக்கிறது. குரு செய்ததற்கு எல்லாம் பிரதி செய்யவே முடியாது என்றாலும் முடிந்த மட்டும் சேவை செய்து காணிக்கை கொடுக்க வேண்டும்.

சாந்தமும் விநயமும் இருந்த வரையில் வித்யை வளர்ந்தது. இப்போது சாந்தத்தைக் கெடுத்து சலனத்தைக் கொடுத்துத் தடுமாற வைக்க எத்தனை உண்டோ அத்தனை ஸினிமாவும் கதைப் புத்தகங்களும் ஸ்கூலில் படிக்கிற நாளிலேயே வந்து சேர்ந்து விடுகிறது. காமம் புகுந்து விகாரப் படுத்தாத பிரம்மசரியம் என்பது படிக்கிறவனுக்கு இல்லை. சாந்தத்தைக் கெடுத்துச் சலனத்தைப் பெரிதாகக் கொடுக்கிற இன்னொரு சத்ரு குரோதம். அதைத்தான் பள்ளிக்கூட நாளிலிருந்தே இன்றைய அரசியல் கட்சிகள் பசங்களுக்கு ஊட்டி வருகிறது. சாந்தம் போய், விநயம் போய், அகம்பாவமும், கர்வமும் வந்தபின் அவற்றோடு கூட உண்மையான வித்யையும் போய் விட்டது.

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிகாமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**



# கல்யாணப் பரிசு

## அமுதவன்

"நீ அனுவசியமான முக்கியத்துவம் தர்றே. அந்தப் பொண்ணு கல்யாணம் செய்தப்புறம் நம்மளை விட்டுட்டு வேறெங்கியோ போகப் போகுது. நாம் யாரோ அந்தப் பொண்ணு யாரோ. இந்த வேலைக்காரங்களை வேலைக்கமர்த்தறது எல்லாம் கிட்டத் தட்ட ரயில் சிநேகம் மாதிரி. பேசிக் கொண்டிருந்து ஸ்டேஷன் வந்தா இறங்கிப் போய்க்கிட்டே இருக்க வேண்டியதுதான்."

"என்னங்க நம்ம தாயம்மாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்காம். இங்க திருப்பத்தூர் பக்கத்துலதான் ஏதோ கிராமமாம். நாம ரெண்டு பேரும் கட்டாயம் வரணுமாம்! சொல்லிட்டுப் போயிருக்கா"

"இப்ப அதுக்கென்ன?"

"இல்லே... ரெண்டு வருஷமா நம்ம வீட்ல வேலை செய்யறா. பாவம் நல்ல பொண்ணு. ஒரு பொய்யோ திருட்டோ கிடையாது. சூதுவாது அறியாதவ. கொஞ்சம் அசமஞ்சம் கிறதைத்தவிர வேறெண்ணும்குறைசொல்ல முடியாது. அம்மாக்காரிதான் இவளைப் போலவே எங்கேயோ வேலை செய்து குடும்பத்தைக் காப்பாத்தறாளாம்."

"சரி விஷயத்துக்கு வா" என்றேன்.

"இல்லேங்க நாம எதெதுக்கோ எவ்வளவோ செலவழிக்கிறோம். இவ கல்யாணத்துக்குத் திருப்பத்தூருக்கு ஒரு நடை போய் வந்துரலாம்னு தோணுது."

"இதப் பாரு சுநந்தா அப்படியென்ன இவ ஆயுசு பரியந்தம் நமக்காக உழைச்சிருக்கா? ஏதோ நம் தேவைக்காக நாம வேலைக்கு வச்சிருக்கோம். அவ தேவைக்காக அவ வந்து வேலை செய்யறா. அதுக்கேத்த சம்பளமும் கொடுக்கறோம். காப்பி டிபன், சாப்பாடுன்னு தர்றோம். இதுக்கு மேல என்ன செய்ய முடியும்?"

"சரிவிடுங்கோ. ஏதாவதுபிரசண்டேஷன் மட்டும் தந்துரலாம்" என்று சொல்லிப் பேசாமலாகிவிட்டாள் சுநந்தா.

இம்மாதிரி விஷயங்களில் இவளுக்கு எவ்வளவு சொன்னாலும் உரைப்பதில்லை. கருணை, தயாளசிந்தனை, பச்சாதாபம் இவையெல்லாம் அளவுடன் இருக்க வேண்டும் என்று சொல்லுவேன். காதில் வாங்கிக் கொள்வாளே தவிர கடைப்பிடிப்பதில்லை.

ஒரு இரண்டு நாட்கள் கழித்து நான் எதிர்பார்த்தபடியே மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள் சுநந்தா. "என்னங்க என்ன முடிவு எடுத்தீங்க?"

"எதைப் பத்தி முடிவு செய்யணும்?"

"அதான் நாம தாயம்மாவின் கல்யாணத்துக்குப் போறதைப் பத்தி."

எனக்குக் கோபம் வர, கட்டுப்படுத்திக் கொண்டு, "ஏற்கெனவே அதைப் பத்திச் சொல்லிட்டேன். நீ அனுவசியமான முக்கியத்துவம் தர்றே. அந்தப் பொண்ணு கல்யாணம் செய்தப்புறம் நம்மளை விட்டுட்டு வேறெங்கோ போகப் போகுது. நாம் யாரோ அந்தப் பொண்ணு யாரோ. இந்த வேலைக்காரங்களை வேலைக்கமர்த்தறது எல்லாம் கிட்டத்தட்ட ரயில் சிநேகம் மாதிரி. பேசிக் கொண்டிருந்து ஸ்டேஷன் வந்தா இறங்கிப் போய்க்கிட்டே இருக்கவேண்டியதுதான்."

"நம்மளைப் பத்தி அப்புறம் அவ என்னங்க நினைப்பா?"

"என்ன வேணும்னாலும் நினைச்சிட்டுப் போகட்டும்" என்றேன்.

"சரி கல்யாணத்துக்கு நேர்ல போக வேணும். நல்ல மாதிரியா ஏதாவது பிரசண்டேஷன் செய்துரலாம்" — என்றாள்.

"ஆகட்டும். என்னிக்குச் சொல்லிட்டுப் போகவர்றாளோ அப்ப கையில ஒரு ஐம்பது ரூபாய்த் தந்துருவோம். இல்லாட்டா இப்பத்தான் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் விலையெல்லாம் மலிவாயிருக்கே ஒரு பெரிய டிபன்கேரியரோ அல்லது பெரிய சைஸ் தட்டு ரெண்டோ வாங்கித் தந்திரலாம்."

சுநந்தா இதை எதிர்பார்க்கவில்லை போலிருக்கிறது. "போங்க சரியான கஞ்... இவரா இருக்கீங்களே" என்றாள் கோபமாக. "ஒரு நல்ல புடவையாச்சும் வாங்கித் தந்துரலாம். ஆரணிப் பட்டெல்லாம் முந்நூறு நானூறு ரூபாய்க்குள்ள கிடைக்குது. ஒரு புடவை எடுத்துத் தந்துரலாம்."

"சரிதாம்போடி" என்றேன். "காசு என்ன உங்க அப்பன் வீட்டுலிருந்தா வந்து குவிஞ்சு கெடக்கு? பெரிய கொடைவள்ளலாட்டம் கண்டவங்களுக்கு வாரிக் கொடுக்க?"

சமாதானம் இல்லாமல் தன் வேலைகளைக் கவனிக்கச் சமையலறைக்குச் சென்று விட்டாள் சுநந்தா.

தாயம்மா ஊருக்குக் கிளம்பும்போது சொல்லிக் கொண்டு போவதற்கு வருவாள் என்று நாங்கள் எதிர்பார்த்திருந்தது நடக்கவில்லை. எங்களிடம் சொல்லாமலேயே ஊருக்குக் கிளம்பிவிட்டிருந்தாள். இது விஷயம் கேள்விப்பட்டதும் நான் சுநந்தாவை

நன்ருகப்பிடித்துக்கொண்டேன். "இப்போது பார்த்தாயா அவன் நடந்துக்கிட்ட நன்றி கெட்ட தனத்தை...? இதுங்களுக்கெல்லாம் அளவுக்கு மீறிப் பரிதாபப் படறதோ நெனக்கிறதோ கூடத் தப்பு."

சுநந்தாவுக்குப் பதில் பேச வாய்ப்பில்லாமல் போயிற்று.

* * * * *

ஒரு வாரம் சென்றிருக்கும்.

ஆபீஸுக்குக் கிளம்பிக் கொண்டிருக்கும் போது கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. தாயம்மாள் நின்றிருந்தாள். அருகிலேயே அவளுடைய புருஷன்.

"வா தாயம்மா வா... எப்படி இருக்கே? எப்ப வந்தே?" என்று பரபரப்பாய் வரவேற்ருள் சுநந்தா. தாயம்மாவைக் கண்ட மகிழ்ச்சி அவள் முகம் முழுக்கப் பரவியிருந்தது.

"நமஸ்காரம்மா. நேத்திக்கு ராத்திரிதான் வந்தோம்மா. விடிஞ்சதும் இங்கதான் வரணும்னு வந்திருக்கோம். எங்கே ஐயாவை வரச் சொல்லும்மா நமஸ்காரம் பண்ணணும்."

"என்னங்க இப்படி வாங்களேன்" என்று சுநந்தா அழைக்க, நான் பக்கத்தில் போய் நின்றேன்.

"ஆசீர்வாதம் பண்ணுங்க" என்று இருவரும் காலில் விழுந்து நமஸ்கரித்தார்கள்.

"என்ன தாயம்மா இப்படிப் பண்ணிட்டே? ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் கொள்ளாமல் போயிட்டியே?"

"திடீர்னு பொறப்படச் சொல்லி மாமா வந்து கூப்டாங்கம்மா. அந்த அவசரத்துல கூட சொல்லிட்டுப் போகலாம்னு எங்க அம்மாவைக் கூப்பிட்டுக்கிட்டு இங்க ஓடிவந்தேம்மா. நீங்களும் ஐயாவும் சினிமாவுக்கோ எங்கேயோ போயிட்டிருந்தீங்க. அதான் சொல்ல முடியாமல் போயிடுச்சி. எனக்கு மனசே கேட்கலே. சர்தான் கல்யாணம் முடிஞ்சதும் மொதல் வேலையா ஐயாட்டயும் அம்மாட்டயும் போய் ஆசீர்வாதம் வாங்கிடுவோம்னு சொல்லி மூணாவது நாளே இவரைக் கூப்டுக்கிட்டு வந்துட்டேன்மா."

"ஏம்ப்பா நீ என்ன செய்யறே?"

"க்வாரியிலங்க. கல்லுடைக்கிறேனுங்க" — என்னிடம் பதில் கூறிவிட்டு அவன் தாயம்மாவைப் பார்த்து என்னமோ ரகசியமாய்ச் சீண்ட அவள் கையிலிருந்த பைக்குள்ளிருந்து எதையோ எடுத்தாள். "ஏதோ எங்களைப் போல் ஏழைங்களால முடிஞ்சது...



ஐயாவையும் அம்மாவையும் சும்மா வந்து நமஸ்காரம் பண்ணக் கூடாதுன்னு சொல்லி ஐயாவுக்கு ஒரு வேட்டியும் அம்மாவுக்கு ஒரு புடவையும்... கூலிக்காரங்ககிட்டே எப்படி வாங்கறதுன்னு யோசிக்காம வாங்கிக்கணும்... ஏதோ எங்களால முடிஞ்ச மரியாதி..."

அவள் கையிலிருந்த சுமாரான ரக வேட்டியும் புடவையும் என்னைப் பார்த்துச் சிரித்தன!

வாசல் கதவை யாரோ தட்டுவது கேட்டது.

தாடியும் மீசையுமாய், ரௌடி என்று சொல்கிற மாதிரி ஒருவன் கதவை மறுபடியும் தட்டினான். மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள்.

# சாய நியாயங்கள்

## சுப்ரபாலன்

''இந்தாங்க...''

''என்ன மீனா?''

''எத்தினி வாட்டி சொல்லியாச்சு... காது லேயே போட்டுக்க மாட்டேங்கறீங்க. தெனத் துக்கும் பொழுது விடிஞ்சாப் பொழுது போனா இதே ரோதனையாய்ப் போச்சு.. மானப்பட்டவங்க குடியிருக்கிற எடமாப் பாருங்க, போயிடலாம்னு எத்தினி வாட் டிங்க முட்டிக்கிறது?''

வழக்கம் போல் அலுத்துக் கொண்டாள் மீனா... வழக்கம்போல் அதைக் கேட்டுத் தலை யாட்டி விட்டு, வழக்கம் போல் புகை வளை யத்துக்குள் புகுந்து கொண்டான் ராஜா ராமன்.

தெருவில் ஊரே ஒட்டு மொத்தமாய்த் திரண்டிருந்தது. கௌரவமான நடுத்தர வர்க்கத்தாரின் அடுக்கு மாடி வீடுகளை ஒட்டி னாற்போல், 'ஸ்லம்' என்று கொச்சைப் படுத் தப்பட்ட வசதியற்றவர்களின் குடியிருப்புக் களையும் எழுப்பி சோஷலிஸம் கொண் டாடிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த ஏழை மக்கள் குடியிருப்பின் பார்வை எல்லையில் இருப்பதே அவளுக்கு அருவருப் பாக இருந்தது. தினமும் சாராயச் சண்டை கள், தண்ணீர் வராத குழாயடிச் சண்டைகள், வழக்கமான கணவன், மனைவி, மாமியார் மருமகள் வறுமைச் சண்டைகள்—

மொத்தத்தில் இங்கே குடிவந்த நாள் வைந்து மாதங்களாக மீனாவுக்குத் தினசரி நரக வேதனைதான். கான்வெண்ட் படிப்பு, கட்டுப்பாடான சூழல், அளந்த பேச்சு என்று வளைய வந்து பழகிவிட்ட அவளுக்கு இந்த அசிங்க ஆரவாரங்கள் குமட்டலெடுத் தன. மாப்பிள்ளைக்கு நான்கு இலக்கச் சம் பளம், வசதியான வீடு, கார், என்றெல்லாம் ஆசைப்பட்டுப் பெண்ணைக் கொடுத்த அப்பா இந்தக் கண்ணராவியையெல்லாம் பார்க்க நேர்ந்தால் எப்படி வருத்தப்படுவார் என்று நினைக்கவே அவளுக்கு அச்சமாக இருந்தது.

''சரி! கொஞ்சம் பொறுத்துக்க... அடை யாறு பெஸண்ட் நகர்ப் பக்கம் தனியாகவே வீடு பார்த்திடலாம்...'' என்று சொல்லி விட்டு அவசரம் அவசரமாகப் புறப்பட்டு வெளியே போனான் ராஜாராமன். இனி மேல் அவன் வீடு திரும்ப இரவு பத்தும் ஆகலாம், மேலேயும் ஆகலாம். அதுவரை தெருச் சண்டை ஓயப் போவதில்லை.

திடுதிடுவென்று யார் யாரோ ஓடுவார் கள். யார் யாரோ கத்துவார்கள். 'தம்—தம்' என்று அடியும் உதையும் காதுபடவே கேட் கும்.

மீனாவுக்கு அலுத்துப் போய் விட்டது. இன்று சண்டை கொஞ்சம் தீவிரப்பட்டு விட் டது. யாரோ யாரையோ அரிவாளால் வெட்டி விட்டார்கள் என்று கூட எதிர்வீட்டுக் கார அம்மாள் சொன்னாள்.

சற்றைக்கெல்லாம் அங்கு வந்த ஆம்பு லன்ஸ் வண்டியும், போலீஸ் கெடுபிடிகளும் அந்த அம்மாள் சொன்னதை உறுதி செய் தன.

''ஏதாச்சும் சண்டை நடந்தா வெளியே போயி எட்டிப் பார்க்காதே மீனா. என்னவாச் சும் ஏசகுபிசகா ஆயிட்டா சாட்சி சம்மன்னு கூப்புடுவானுங்க. நமக்கெதுக்கு வம்பு?'' என்று ஒருநாள் நியாயம் பேசிவிட்டுப் போனான் ராஜாராமன். அது இன்று அவ ளுக்கு நினைவுக்கு வரவே தலையை உள்ளுக்கு இழுத்துக் கொண்டு ஜன்னல் கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

சற்றைக்கெல்லாம் கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்தது. அவளுக்கு. ராஜாராமன் வருகிற வரை ஒரு குட்டித் தூக்கம் என்றும் கூட அவளுக்குப் பழகிப் போய் விட்டது. எப்போது தூங்கினோம் என்றே உணர முடி யாத நிலையில் விழிப்பு வந்தது. வாசல் கதவை யாரோ தட்டுவது கேட்டது.

ராஜாராமன் இல்லை.. அவனாக இருந் தால் கதவைத் தட்டுகிற முறையே வேறு... காலிங்பெல் வேறு இருக்கிறது.

கதவைத் திறக்காமல் லைட்டையும் போடா மல், பக்கத்து ஜன்னல் வழியே கதவுப் பக்கம் பார்க்க முடிகிற மாதிரி ஒரு வசதி. பார்த்தாள்.

தாடியும், மீசையுமாய், ரௌடி என்று சொல்கிற மாதிரி ஒருவன் கதவை மறுபடி யும் தட்டினான். மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள்.

தெரு விளக்கின் வெளிச்சம் அவன் மேல் பட்ட போது முகம் அடையாளம் தெரிந்தது.

''இவனா?''

அவனைப் பற்றி நிறையவே மீனு கேள்விப் பட்டிருந்தாள். குடிப்பான். கட்சி அரசியல் சண்டை போடுவான். பெண்களைக் கண் டால் பல்லை இளித்து வலிய வந்து பேசு வான். இவனிடம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று முதலிலேயே புள்ளி போட் டிருந்தாள் மீனு.

சிறிதுநேரம் தட்டிவிட்டுப் பதில் வராத தால் திரும்பி நடந்தான் அவன். தெரு விளக் கில் போய் நின்று கொண்டிற வரை பார்த் தாள் மீனு... உதறல் எடுத்தது.

கடிகாரத்தைப் பார்த்தாள். இரவு பன்னி ரண்டை நெருங்கிக்கொண்டிருந்ததை அறிந்த போதுபயம்பஞ்சாய் அவள் நெஞ்சை அடைத்



துக் கொண்டது. ஏன் இவரை இன்னும் காணவில்லை என்று மனம் அடித்துக்கொண்டது.

பல்லைக் கடித்துக் கொண்டு, ஓசைப்படாமல் கதவைத் திறந்தாள். எதிர் ஃப்ளாட்டின் அழைப்பு மணியை அழுத்தின சுருக்கில், அவர்கள் கதவைத் திறந்தார்கள். வெளிச்சம் வந்தது. மீனுவும் விளக்கைப் போட்டாள்.

இன்னும் அந்தத் தாடி மீசை தெரு விளக்கின் அடியிலேயே நின்று கொண்டிருந்தான். எதிர் வீட்டுக்காரரிடம் விஷயத்தைச் சொன்னாள்.

''இன்னும்ராஜாராமன் வரல்லே?'' அவர் கேட்டார்.

''என்னவோ டிஸ்கஷன் இருக்கு நாழியாகும்னு நேத்திக்கிச் சொன்னாங்க... இன்னிக்கி நாழியாகுமுண்ணு சொல்லலீங்க...''• என்றாள், மீனு.

தாடி மீசை... தானே மறுபடியும் படியேறி மேலே வந்தான். எதிர்வீட்டுக்காரர் உஷாரானார். பெண்கள் உள்ளே போனார்கள்.

அவன் அப்பாவியாக வந்து நின்றான். சின்னக் கடிதாக அவன் கையிலிருந்தது. வாங்கிப் பார்த்தார். 'டி—6, ராஜாராமன்' என்று முகவரி இருந்தது.

''இந்த வூடுதானுங்களே... எம்மாம் நேரமாக் கதவைத் தட்டறேன். அம்மா கதவையே தொறக்கல்லீங்களே... ஆமாங்க.. அவரு நர்ஸிங் ஹோம்ல இருக்காருங்க. ராஜூ அய்யா சொல்லியனுப்பிச்சது. கவலைப்படவேண்டாம்.. காலையில வந்துடுவார்னு சொல்லச் சொன்னாருங்க...''

அவன் விடுவிடென்று இறங்கிப் போய் விட்டான். எதிர்வீட்டுக் காரர் எப்படியோ பார்த்தார். கதவைப் பூட்டிக் கொண்டு புறப்பட அவரும் அவர் மனைவியும் துணைக்கு வர—

அந்த நர்ஸிங் ஹோம் வாசலில் இரண்டு மூன்று கார்கள்.

உள்ளே சற்று நினைவிழந்த நிலையில் ராஜாராமன் படுத்திருந்தான்.

எதிர்வீட்டு நண்பர், மறுபடியும் அவனை வித்தியாசமாகப் பார்த்தார். ''ஒன்றுமில்லையம்மா... நாம போகலாம்... அவர் காலையிலேயே வரட்டும்...'' என்று அவசரப்படுத்தினர்.

யார் யாரோ ஆங்கிலத்தில் பேசினார்கள். மீனுவுக்கு எங்கோ உதைத்தது. டாக்டரிடம் அவர்கள் பேசிய போது அவளுக்கு ஓரளவு புரிந்த போது அவளுடைய தலையில் இடியே இறங்கின மாதிரி இருந்தது.

''ஒண்ணுமில்லேம்மா...ட்ரிங்க் அளவுக்கு மீறிப் போயிருக்கு... வாமிட்டிங்... கலைச்சுப் போயி...''

விடுவிடுவென்று வெளியே நடந்தாள் மீனு.. தெருவில் இனிமேல் யாரிடமும் அவளுக்குப் பயமில்லை... சாராயச் சண்டைகள் இனிமேல் அவளை மிரட்டாது. வேறு குடியிருப்புக்குப் போகவும் வேண்டாம்.

தினசரி இரவு நேரத்தில் வீடு திரும்பும் போது மணக்க மணக்க வாசனைத் தாம்பூலத்தோடு கணவன் வந்ததன் மர்மம் புரிந்த போது அவளுக்கு வேதனையான சிரிப்பு வந்தது.

தாடி மீசையோ இன்னும் வேறு யாருமோ தனக்குஎந்தக்கெடுதலையும்இனிமேல்செய்து விட முடியாது என்று புரிந்தது.

குப்பத்தில் சாராயம், மாளிகையில் உயர் தர மதுபானம்... இதில் யார் உயர்ந்தவர் தாழ்ந்தவர்? 'சோஷலிஸம் வாழ்க' என்று கத்த வேண்டும் போலிருந்தது அவளுக்கு.






அத்வைத வித்யாசார்ய மஹாராஜ ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் 1542–ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் கும்பகோணம் ''ராஜா வேதகாவ்ய பாடசாலை''யை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒருநாள் உணவளிக்க சுமார் ரூ. 200/– ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2000/– மூலதனம் ஏற்படுத்தியோ (அல்லது) அவ்வப்போது ரூ.200/– அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் ஸமாராதனை நடத்தும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடைக்கு 80—G விதியின்படி வருமான வரி விலக்கு உண்டு.

## பாடசாலை காரியாக்ரமங்கள்

| | நேரம் | | |
|---|---|---|---|
| காலை | 4.30 — 4.45 | வரை | —வேத மங்களாசாஸனம் |
| ,, | 4.45 — 5.30 | ,, | —வேத ஆவர்த்தி |
| ,, | 5.30 — 6.30 | ,, | —ஸ்நானம், ஸந்த்யாவந்தனம், ஸமிதாதானம். |
| ,, | 6.30 — 7.25 | ,, | —ப்ரம்மயக்ஞ ப்ரச்னம் |
| ,, | 7.30 — 8.00 | ,, | —காலை போஜனம் |
| ,, | 8.00 —11.00 | ,, | —வேத காவ்ய பாடங்கள் |
| ,, | 11.00 —12.30 | ,, | —மாத்யாந்நிகம், பகல் போஜனம், ஓய்வு. |
| பகல் | 12.30 — 1.45 | ,, | —லௌகிக பாடங்கள் (ஆங்கிலம், தமிழ், கணக்கு) |
| மாலை | 2.00 — 4.30 | ,, | —வேத, காவ்ய பாடங்கள் |
| ,, | 4.30 — 6.30 | ,, | —சிற்றுண்டி, ஸரீர பயிற்சி, ஸந்த்யாவந்தனம், ஸமிதாதானம். |
| ,, | 6.30 — 7.30 | ,, | —ஆவர்த்தி. |
| இரவு | 7.30 — 8.00 | ,, | —இரவு போஜனம். |
| ,, | 8.00 — 8.45 | ,, | —காவ்ய சிந்தனை |
| ,, | 8.45 — — | | —ஓய்வு. |

விபரங்களுக்கு:

**மஹாராஜ ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி**
**கும்பகோணம்.**

# 39

## திருமாமங்கைத் திருவிழா

**வ**ர்மனின் பக்கலில் சிந்து அமர்ந்து பணிவிடை செய்ய, வர்மன் அவளை இரக்கமாகப் பார்த்தான். எங்கேயோ இருக்க வேண்டியவள். மறைந்து போன நாயக்கர் வமிசத்து மீனாட்சிதேவியின் உறவினள்! இளவரசியாக வாழ வேண்டியவள். மதுரை சிங்காதனம் திரும்பி நாயக்கருக்கே போக வேண்டும் என்ற எண்ணத்தில் பாடுபடுகிறாள்.

இவளுக்குத் துணையாக 56 பாளைய அதிபதிகளும் கங்கணம் கட்டி உதவி புரிய வந்திருக்கிறார்கள். மதுரையில் நாயக்கர் வந்தால் தங்களுக்கும் மேல் ஆதிக்கம் காட்டாத அரசு முறை கிடைக்கும் என்று நம்பினார்கள்.

நாயக்கர்களும், பாளையக்காரர்களும் இதற்காக உடன்படிக்கைக் குழு ஒன்று ஏற்படுத்தி இருந்தார்கள்.

அதில் சிந்து சரியான பொறுப்பு வகித்து காரியங்களை நிர்வகித்து வந்தாள்.

அப்படிப்பட்ட சிந்து,

வர்மனின் வாழ்க்கையை எங்கேயோ இழுத்து விட்டதாகப் புலம்பின போது, வர்மன், அதை மறுத்தான்.

உண்மையில் அப்படி அவள் இழுத்து விட்டதனால்தான் அவன் உலகத்தையே அறிகிறான். இதற்குமுன் அவனுக்கு எதுவும் தெரியாது. ராஜ்யம் என்றால் என்ன? அவற்றை யார் யார் நடத்துகிறார்கள். வெவ்வேறு ராஜ்யங்கள் என்ன, அவை எங்கெங்கே இருக்கின்றன,. இவை எல்லாம் தெரிய வந்தன. அது மட்டுமல்ல! கடல் கடந்த ராஜ்யங்கள் கூட அவன் கவனத்திற்கு வந்தன.

எல்லாவற்றுக்கும் தலையானது அவனுக்கு வேன்ஸான் உறவு கிடைத்ததுதான்! 'அடேயப்பா! அது ஒன்றைத்தான் அவன் பொக்கிஷமாகக் கருதினான். அதைக் கேட்ட மாத்திரத்தில் இந்த உலகத்தில் உள்ளோர் துயரம் எல்லாமே போனது போல் தோன்றியது.

வர்மன் அத்தனையையும் சிந்துவிடம் கூறினான். அவனை அவள் திருப்பியதற்கு மிகவும் கடமைப்பட்டிருப்பதாகவும் கூறினான்.

அவன் மூலமாகத்தான் உலகில் அதிகாரம் இல்லாத அரசரைப் பற்றி அறிந்ததையும் கூறி இங்கிலீஷ்கார ராஜ்யத்தில் அரசாங்கம் எந்த முறையில் நடக்கிறது என்பதையும் கூறினான்.

அதுவரை 'உம்' கொட்டிக்கொண்டு வந்த சிந்து அந்த இங்கிலீஷ்காரன் அரசாங்க முறையைப் பற்றிக் கேள்விப்பட்டதும் ஆச்சரியமாகக் கண்களை உயர்த்தினாள்.

விளக்கம் கேட்டுப் பல கேள்விகள் கேட்டாள்.

தனக்குத் தெரிந்தவரை பதில் சொன்னான் வர்மன்.

எல்லாம் கேட்ட பிறகு அவள் நீண்ட நேரம் மௌனமாகிவிட்டாள். மனத்துள் சிந்தித்துக் குமைவது தெரிந்தது.

கடைசியில் ஆச்சரியமாய் ஒரு வார்த்தை சொன்னாள்.

''என்ன இது! இங்கிலீஷ்காரனை மிலேச்சன் என்று சொல்கிறோமே! அவனிடம் ஓர் உன்னத அரசாங்க முறையிருக்கிறதே! ஜனங்களே அரசாங்கத்தை நடத்துகிறார்களே! கேட்பதற்கே மனம் ஏதோ விடுதலை அடைந்த மாதிரி இருக்கிறதே! பூமியில் இருக்கும் ஜனங்கள் எல்லாரும் சந்தோஷமாக இருக்கக் காலம் வரும்போல இருக்கிறதே!'' என்றாள் தாபத்துடன்.

அந்த 'பார்லெமாண்' பற்றி வர்மன் சொல்ல, அவனும் அதைப் பற்றியே வெகு நேரம் பேசினாள்.

இத்தனை நாள் குருடாய்க் கிடந்தவர்களுக்குத் திடீர் என்று பார்வை கிடைத்தது போல் இருந்தது.

'என்ன ஆச்சரியம்!' என்று திரும்பத் திரும்பக் கூறினாள் சிந்து. ''ராஜா தம் இஷ்டப்படி வரிபோட முடியாது. தண்டனை கொடுக்க முடியாது. சிரச்சேதம் பண்ண முடியாது. சண்டைக்குப் போக முடியாது. ஆகா! ஆகா! அந்த நாட்டு மக்கள் என்ன சுபிட்சமாக



இருப்பார்கள்!'' என்றான்.

''ஏன்! இங்கே வந்துள்ள இங்கிலீஷ்காரனைப் பார்த்தே அது தோன்றவில்லையா? என்ன புஷ்டியாக இருக்கிறார்கள்! எத்தனை நூதனப் பொருள்களை வைத்திருக்கிறார்கள்? என்ன திறமையான படையை வைத்திருக்கிறார்கள்! கப்பல்களை ஓட்டுகிறார்கள்!''

சொல்லச் சொல்ல அவனுக்கே சிலிர்ப்பு ஏற்பட்டது.

''ஏன் வீரரே! நமது நாட்டுக்கும் அதுபோல் ஒரு ராஜாங்க முறை வருமா?'' என்றான் பரபரப்புடன்.

''ஏன்! இங்கிலீஷ்காரனோடு பழகினால் வருகிறது!''

''வருமா?''

''வரும்.''

''எனக்கு இப்போதே அவர்கள் நாட்டைப் போய்ப் பார்க்க வேண்டும் போல இருக்கிறது.''

சிரித்தான் வர்மன்.

''எனக்கும் தோன்றுகிறது. அவசரத்துக்குப் பார்க்க வேண்டுமானால் அவர்களது ஸென் ஜார்ஜ் கோட்டைக்குள் (சென்னை) போய்ப் பார்! எல்லாமே ஒழுங்கு முறையில் நடக்கும் என்று வேன்ஸான் சொன்னார். சாலையில் கூட போகிற குதிரைகளும் வாகனங்களும் இடது பக்கமாகப் போகுமாம். வருகிற குதிரைகள் வாகனங்கள் வலது பக்கமாக வருமாம். என்ன அழகாக இருக்கும் அது!''

''இங்கேயே இப்படி இருந்தால் அவர்கள் நாட்டில் எப்படி இருக்கும். நிச்சயம் போய்ப் பார்க்க வேண்டும்.''

''போகலாம். நீயும் நானும் நிச்சிந்தையாய் கப்பல் ஏறிவிடுவோம். நமது தேசத்து சண்டை பூசல் எல்லாவற்றையும் மறந்து விடுவோம்.''

மெய்மறந்து அவர்கள் பேசினார்கள்.

உண்மையில் இப்போது சிந்துவுக்கு இந்த நாட்டு ராஜாங்க முறைகளும் அவைகளின் விவகாரங்களும் வெறுத்திருந்தன.





கோவை வானொலியில், பொது அறிவு வினா பகுதியில், "மூக்குக் கண்ணாடியைக் கண்டுபிடித்தவர் பெயர் என்ன?" என்று கேட்டார்கள்.

நாலு வயதுப் பையன் திருப்பிக் கேட்டான்: "ஏன் மூக்குக் கண்ணாடியைத் தொலைத்தவரின் பெயரைக் கேட்கவில்லை?"

—அ. சுந்தரம்.

---

எவ்வளவு உழைத்தாலும் பாடுபட்டாலும் இவை மாறுமா, ஜனங்கள் பயன் அடைவார்களா என்று சந்தேகமே இருந்து வந்தது.

அது இப்போது சற்று வெளிப்படையாக வந்தது:

"வீரரே! வெறும் பகல் கனவை நம்பி உழைக்கிறீரோ" என்று ஆதங்கத்தோடு கேட்டாள் சிந்து.

அவள் மனம் அதிகம் நொந்துவிடாதபடி சமாதானம் செய்தான் வர்மன்.

* * * * *

அடுத்த நாள் மீண்டும் புறப்பட்டார்கள். வழியில் பல தடங்கல்களையும், ஆபத்துகளையும் மீறிக் கடிலம் ஓரத்தில் குடி கொண்டிருந்த அந்தத் திருமாமங்கை ஸ்தலத்தை அடைய எட்டு நாள் ஆகிவிட்டது.

திருமாமங்கை இன்னும் பல காதம் இருக்கும் போது, அங்குள்ள வன நெருக்கத்தில் தண்டு இறங்கி, உளவுக்காரர்களை மட்டும் அனுப்பி உளவு பார்த்து வரச் சொன்னார்கள்.

ஏற்கெனவே தம் இச்சையாகத் திரியும் மராத்தியக் கும்பலின் தொல்லை அதிகமாக இருந்தது.

இதனால் திருமாமங்கைக்கு வர வேண்டிய முழுக் கூட்டமும் இன்னும் வந்தபாடில்லை.

சமீப காலங்களில் திருவகீந்திரபுர விழாவிலும், திருவண்ணாமலை தீப விழாவிலும் மராட்டியர் திடீரென்று பக்தர்கள் மீது பாய்ந்து அவர்கள் பொருளையெல்லாம் சூறையாடியதை யாரும் மறக்கவில்லை.

தவிர, கிராமங்களில் பாதுகாப்பு இல்லாமல் வாழ்வதை விட்டு ஜனங்கள் தேவி பட்டணத்திலும் (கடலூர் அருகே உள்ள இங்கிலீஷ்காரன் கோட்டை) பிரெஞ்சு புதுச்சேரியிலும் சரண் புகுந்தார்கள். கோட்டைக்குள் வாழ்வதையே பாதுகாப்பு என்று எண்ணினார்கள்.

மராட்டியர் தொல்லை ஒருபுறம் இருக்க, நாட்டில் நடக்கும் சிங்காதனச் சண்டையில் எங்கும் அமைதி இல்லாமல் கலவரப்பான்மை தான் இருந்து வந்தது. ஜனங்கள் தம் தம் இடங்களை விட்டு வெளியே போக அச்சப்பட்டார்கள்.

விழாக்களோ, பண்டிகைகளோ, குறைந்த கும்பல்களோடு நடந்தன:

இவ்வளவு சேதிகளைச் சேகரித்த உளவுக்காரர்களுக்கு, திருமாமங்கையில் கூடியிருந்த கூட்டம் ஆச்சரியமாக இருந்தது.

நல்ல கூட்டம் ஒன்று கூடியிருந்தது. அவர்களில் பெரும்பாலோர் பாளையக்காரர்கள் என்று உளவுக்காரர்கள் அனுமானித்தார்கள். எனவே கவலைப்பட வேண்டியதில்லை.

தவிர, அந்த விழாவுக்கே சிறப்பான அம்சம்போல் நிறைய ஆண்கள் மோகினி வேடம் தரித்து வந்திருந்தார்கள். அவர்களைப் பார்த்தால்தான் உளவுக்காரர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது.

சாதாரண பக்திமான் வேடத்தில் வந்திருந்த பாளையக்காரர்களை நிச்சயம் அவர்கள் முகவிலாசத்திலிருந்து யார் இன்னார் என்று கண்டு பிடிக்க முடிந்திருந்தது.

ஆனால் மோகினி வேஷம் போட்டு வந்தவரை யார் என்று கணிக்க முடியவில்லை. இந்த மோகினிகள் நூற்றுக் கணக்கில் வந்திருப்பதைப் பார்த்ததிலிருந்துதான் உளவுக்காரர்களுக்குச் சந்தேகம் வந்திருந்தது.




இறைவனின் மறு உருவமாக விளங்கிக் கொண்டிருப்பவர் எம்.ஜி.ஆர். அவருடைய ஆற்றலைத் தெரிந்து கொள்ளும் சக்தி எங்களுக்கே கிடையாது.

— அமைச்சர் ஆர்.எம். வீரப்பன்.

தற்போது திறப்பு விழாக்களெல்லாம் அதிகமாக நடக்கின்றன. மந்திரிகள் எல்லாம் மசாஜ் கிளப்புகளைத் திறக்க நினைக்கிறார்கள்.

— ரகுமான்கான்.

கனடாவில் இருந்து புறப்பட்ட ஜம்போ ஜெட் விமானத்தை வெடிகுண்டு வைத்துத் தகர்த்து 329 உயிர்களைக் குடித்த பயங்கர சீக்கிய தீவிரவாதிகளை விடக் கருணாநிதி கொடியவர்!

— அமைச்சர் ஆர். எம். வீரப்பன்.

இவர்கள் மராட்டியர்களாக இருப்பார்களோ!

இவ்வளவு விஷயங்களையும் வேவு காரர்கள் சொல்லக் கேட்டதும் அந்த 'மோகினி திருக்கோல'க் குழுவினர் கலந்து ஆலோசித்தார்கள்.

அவர்கள் செய்த ஏற்பாட்டின்படி பிரெஞ்சு படை ஒன்றும் 'பக்தர்கள்' வேடத்தில் விழாவுக்கு வர வேண்டும். அவர்கள் செஞ்சுகாவை அழைத்து வர வேண்டும். திருமாமங்கையில் தங்களது பல்லக்குகளை மட்டும் மாற்றிக் கொண்டால் போதும். செஞ்சுகா இவர்கள் பக்கம் வந்துவிடுவாள். திருப்பதிப் பொருள் பிரெஞ்சுப் பக்கம் போய்விடும். நவாப், இங்கிலிஷ்காரர், மராட்டியர் ஆகிய மற்றவர்கள் கண்ணில் படாமல் பரிவர்த்தனை செய்வதற்குத்தான் இந்த ஏற்பாடுகள் எல்லாம்.

குறிப்பாக வர்மனும், இதரப் பெரியவர்களும் "பிரெஞ்சுக்காரர் பல்லக்குக் கோஷ்டி வந்ததா இல்லையா?" என்று கேட்டார்கள்.

"இதுவரை பார்க்கவில்லை!" என்றார்கள் அவர்கள்.

"எல்லா இடமும் சுற்றிப் பார்த்துவிட்டீர்களா?" என்றான் வர்மன்.

"பார்த்துவிட்டோம். அவர்கள் வந்ததாகத் தெரியவில்லை."

ஒருவேளை அவர்களும் வேறு எங்கேயாவது தண்டு இறக்கி விட்டார்களோ!

பெரியவர்கள் சிறிது கலக்கமானார்கள். கடைசியில்வர்மன் எழுந்துதீர்மானமாகச் சொன்னான். "பெரியவர்களே, கவலைப்பட வேண்டாம். திருப்பதிப் பொருள் யார் கையிலே போக வேண்டுமோ அவர்கள் கையில்தான் போகும். நான் நினைத்தாலும் நீங்கள்நினைத்தாலும் ஒருவரிடம் போகப் போவதில்லை. பெருமாளே அதைப் பார்த்துக் கொள்வார். இன்று இரவு நானும் ஒரு முறை திருமாமங்கை போய்ப் பார்த்து வருகிறேன்" என்று கூறினான்.

இரவில்வர்மன் திருமாமங்கையை அணுகினான்.

அந்த நதி ஓரக் கிராமத்தில் எங்கும் தீவர்த்தி ஒளிகள் ஜொலித்தன.

எங்கும் பகவன் நாமம் பஜனையாகக் கேட்டது.

சில இடங்களில் ஆடிப் பாடியே பஜனை செய்தார்கள்.

"கிருஷ்ணா, ராமா, ஹரே முகுந்தா" என்று கோஷங்கள் மாறி மாறிச் செவியில் விழுந்து அவனையே வெறி கொள்ளச் செய்தது.

கோபுரத்தைப் பார்த்தான். மெய்மறந்து கண்மூட, "வீரரே" என்று குரல் கேட்டது.

பழகிய குரல்.

தூரத்திலிருந்து வருகிறதா?

திடுக்கிட்டு விழித்துப் பார்த்தான்.

அவன் கண்முன் செஞ்சுகாவின் தோற்றம் மின்னல் ஜொலிப்பு போல் தெரிந்தது.

தவித்து நின்றான் அவன்.

(தொடரும்)

---

உடன்பிறப்பே, அமைச்சர் வீரப்பனின் பேச்சைக் கேட்டதும், ஆரண்யத்துச் சந்தன மரங்களையும் ஆலயத்து உண்டியல்களையும் கொள்ளையடித்துச் சுற்றுலா வாரியத்தையும் சுற்றத்தார் வாரியமாக்கிக்கொண்டிருக்கும் உம்மை (வீரப்பனை)ப் பார்த்துச் சம்பல் பள்ளத்தாக்குக் கொள்ளைக்காரனைவிடக் கொடியவர் என்று எங்களுக்குக் கூற தெரியாதா? எனச் சீறியெழுந்து மேடைகளில் முழங்கத் தொடங்குவாய் என்பது எனக்குத் தெரியும்! ஆனால் அப்படிச் செய்யாதே!

— கலைஞர் மு. கருணாநிதி.



புகைப்படம்: மணி

பெரும்பாலான பத்திரிகைகள் நீதிபதிகளின் தவறுகளைச் சுட்டிக்காட்டப் பயப்படுகின்றன. ஆனால் பாராளுமன்றம், சட்டசபை ஆகியவற்றின் நடவடிக்கைகளை மட்டும் பயமில்லாமல் விமர்சனம் செய்கின்றன.

— சபாநாயகர் பி.ஹெச். பாண்டியன்

மதுக்கடைகள் திறக்கப்படுவதற்கு முன்பு, தாய்மார்களின் கழுத்தில் தங்கச் சங்கலியுடன் தாலி தொங்கியது. பிறகு கவரிங் சங்கிலியில் தாலி தொங்கியது. பிறகு மஞ்சள் கயிற்றில் தாலி தொங்கியது. இப்போதோ மஞ்சள் கயிறு மட்டும் தான் தொங்கிக் கொண்டிருக்கிறது!

— எஸ். டி. சோமசுந்தரம்.

'மொட்டை பழையபடி இந்த ஊருக்கே தண்ணீர் தூக்கிப் பிழைக்க வந்து விட்டாளாம்.'

பழைய வாடிக்கைக்காரர்களுக்குப் பெரிய நிம்மதி.

ஆனால் ஊரில் ஒருவர் தவறாமல் எல்லாரிடத்திலும் உண்டான கேள்வி: 'அந்த வசதியை விட்டுவிட்டு இவள் பழையபடி ஏன் இங்கு தண்ணீர் சுமந்து சாக வந்திருக்கிறாள்?



நீங்கள் விரும்பினால் இப்போதும் அவளை அந்தக் கிராமத்தில் சந்திக்கலாம்.

சற்றுக் கட்டையான உயரம்.

கட்டையாக இருந்தாலும் ரொம்பக் கனம் என்று தோன்றிவிடாத உடம்பு. ஆனால் ரொம்பச் சின்னதும் அல்ல.

ஒரே கலர் சேலை — பச்சை அல்லது நீலத்தில்.

ரவிக்கை கிடையாது.

உடனே நீங்கள் வேறு மாதிரியான ரசனைக்குத் தயாராகிவிட வேண்டாம். சேலை மாராப்பு ரவிக்கையின் ஸ்தானத்தை அத்த சுத்தமாக நிறைவு செய்து கொண்டிருக்கும்.

# மொட்டை

ஜெயந்தன்

ரவிக்கை கூட சமயங்களில் கூட மை தவறி விடலாம். இது தவறாது.

நிறம் மாநிறம்.

வயது முப்பது — முப்பத்திரண்டு.

மொட்டைத் தலை.

அதில் ஒரு பித்தளைப் பானை. இடுப்பில் ஒரு பானை.

அவ்வளவுதான். இந்த அமைப்பில் ஊரில் வேறு யாரும் கிடையாது.

ஊருக்கும் தண்ணீர்த் துறைக்கும் இடையில் பத்து நிமிஷத்திற்கொரு முறை அவளைப் பார்த்து விடலாம்.

நெருங்கிப் பார்க்கும்போது முகத்தில், பெண்மை அல்லது அழகு என்கிற அம்சங்களில் சிறப்பாக எதுவும் தெரியாது. அதே சமயம் அவலட்சணமாகவும் எதுவும் இருக்காது. இருந்தாலும் பெண் உறவு சம்பந்தமாக இவளை யாராவது கருதுவார்களா என்ற சந்தேகம் உங்களுக்கு வரவே செய்யும்.

அவளது தொழிலே வீடுகளுக்குத் தண்ணீர் தூக்கி ஊற்றுவதுதான்.

உபதொழில் அந்தவீட்டுக்காரர்கள் விரும்பினால் அல்லது நிர்ப்பந்தித்தால் கொஞ்சம் பத்துப் பாத்திரம் தேய்த்துக் கொடுப்பது. அல்லது இரண்டுபிள்ளைகளின் சட்டைத் துணியைக் கசக்கிப் போடுவது. வேறொன்றும் இல்லை.

ஆனால் இந்த எளிய தொழிலை அவள் எதிர் கொண்டிருந்த பாங்கு — கொஞ்சம் வியப்பானது. அவள் வருவதும் போவதும் பார்த்தால், இவளால் தண்ணீர் சுமக்காமல் இருக்க முடியாதோ என்றே நமக்குத் தோன்றும். கிடைப்பதோ மாதத்திற்கு நாற்பதோ ஐம்பதோ. ஆனால் காலையில் ஆறு மணிக்குப் பானைகளைக் கையில் பிடித்தாளானால் அவைகளை மீண்டும் வைப்பதற்கு இரவு மணி எட்டு அல்லது ஒன்பதாகிவிடும். ஊருக்கும் நீர் நிலைக்கும் இடையே பொழுது முழுக்க நடை, நடை, நடை. எப்போதுதான் உண்பாளோ, உடுப்பாளோ மனுஷி ஆனால் இந்தக் கஷ்டத்தின் மீது ஒரு சின்ன முணுமுணுப்பு இருக்க வேண்டுமே.

அது சரி, இவள் குடிக்கிற கஞ்சிக்கு இப்படி சுமந்து நடக்க, சக்தி எங்கிருந்து வருகிறது?

மொட்டை என்பது காரணப் பெயர். அவளது சொந்தப் பெயர் ரொம்பப் பேருக்குத் தெரியாது. அதைக் கைவிட்டு விடும்படி இந்தப் பெயர் பிரசித்தமாகி விட்டது. ஈறு பேன்களுக்குப் பயந்தோ, அல்லது எண்ணெய்ச்செலவுக்குப்பயந்தோ அடிக்கடி மொட்டை அடித்துக் கொள்வாள். ஒரு அரை சென்ட்டிமீட்டர் நீளம் தாண்டிய முடியோடு அவளைப் பார்த்தவர்கள் இந்தப் பத்து வருஷமாக ஊரில் யாரும் இல்லை.

இந்தமாதிரி, சற்றுமரியாதைக் குறைவான காரணப் பெயர்களுக்குப்பெரும்பாலோர் முகம் சுளிப்பார்கள். அந்தச் சுளிப்பும் இவளிடம் கிடையாது. உள்ளதைத்தானே சொல்கிறீர்கள் என்று அதைத் தாராளமாக அங்கீகரித்து விட்டது மாதிரி இருக்கும் அவளதைக் கேட்டுக் கொள்வது. இதனால் ஊரில் நண்டு சிண்டெல்லாம் கூட வாய் நிறைய 'மொட்டே' என்றே அவளை அழைக்கும்.

அவள் ஐந்தாவது வீட்டை முடித்துக் கொண்டு ஆறாவதாக ஒன்றை ஒப்புக் கொண்ட போது பழைய வாடிக்கைக்காரர்கள் கடுமையான எதிர்ப்புத் தெரிவித்து விட்டார்கள்.

"ஆமா, மொதல்ல ஒன்னக் கூப்புட்டு வுடவே ஒரு ஆளு வச்சுக்கணும். இன்னம் ஒரு வீட்டுக்கு எடுக்க ஆரம்பிச்சியானா, வெளங்கித்தான் போவும்," என்று சொல்லி விட்டார்கள்.

செட்டியார் வீட்டில் மொட்டை நுழைந்து விட்ட பிறகு தனலெட்சுமிக்கு ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகம்தான். எவ்வளவு நேரம், எவ்வளவு நேரம் என்று கறுவிக் கொண்டேயிருப்பாள். இது உமையாள் ஆச்சிக்குத் தெரியும். இதில் அவளுக்கு ஏகப்பட்ட சந்தோஷம். ஆசாமி கருகிச் சாகட்டுமென்று வேண்டுமென்றே மொட்டையைத் தாமதப்படுத்துவாள். 'இன்னம் ரெண்டு கொடம்' என்பாள். 'அந்தத் துண்டை அலசிப் போட்டுட்டுப் போயிடு' என்பாள்.

இது அடுத்த நாள் அப்படியே மாறு கோணத்தில் நடக்கும். மொட்டை இப்போது தனலட்சுமி வீட்டில் சிக்கிக் கொண்டிருப்பாள். அங்கே ஆச்சி வெந்து கொண்டிருப்பாள். தனலெட்சுமி சந்தோஷம் கண்டு கொண்டிருப்பாள்.

செட்டியார் வீடு மொட்டை தண்ணீருக்குப் போகிற வழியில்தான் இருந்தது. இதனால் கணிசமான நேரமானதும் ஆச்சி திண்ணையில் உள்ளடக்கமாக நின்று கொண்டு மொட்டை வரும் போது அமுங்கியகுரலில் 'என்னமொட்டே' என்று அதட்டுவாள்.

ஆச்சி மட்டுமல்ல, யார் இந்த மாதிரி அதட்டினாலும் மிரட்டினாலும் மொட்டையிடம் ஒரே பதில்தான் உண்டு:

'இந்தா வந்துட்டேன்.'

ஆனால் வர மாட்டாள். எடுத்துக் கொண்டிருக்கிற வீட்டார் 'சரி போ' என்றால்தான் அடுத்த வீடு.

"அம்மா! உன்னைவிட என்னைத்தான் நிறையப் பேர் விரும்பறாங்க!"

"எதை வைச்சு அப்படிச் சொல்றே?"

"என்னை நிறையப்பேர் முத்தம் வச்சுக்கிறாங்க. ஆனா உன்னை அப்பா மட்டும் தான் முத்தம் வச்சுக்கறார்."



இதனால் சிலர் கடுமையாகக் கோபித்துக் கொண்டு அவள் வந்ததும், 'நீ வர வேணாம் போ. நாங்க வேற ஆளைப் பார்த்துக்கிறோம்' என்று விரட்டுவதும் உண்டு. ஆனால் மொட்டை அவர்களை விட்டுவிட மாட்டாள். 'என்னம்மா செய்யிறது, என்னம்மா செய்யிறது' என்று சொல்லிக் கொண்டே நின்று, அவர்கள் கோபம் ஓரளவு அடங்கியிருக்கலாம் என்று தோன்றியதும் உள்ளே போய்த் தானே குடம் அல்லது பானையை எடுத்துக் கொண்டு கிளம்பி விடுவாள். அப்புறம் அவர்களும் 'சரி தொலை' என்று விட்டு விடுவார்கள்.

எது எப்படியோ, அவள் மீது எல்லோருக்கும் உள்ளூரவாவது ஒரு பிரியம் இருந்தது. கெடுதலே அறியாத அப்புராணி பூச்சி மேல் வைக்கிற பிரியம். அதுவும் இந்தப் பூச்சி தங்களுக்காகக் குறைந்த விலையில் தண்ணீர் சுமக்கிறதே.

அவளொரு தனிமரம்.

ஆனால் ஆறேழு வருஷங்களுக்கு முன்பு கூட அவளுக்குக் கணவனும் இரண்டு பையன்களும் இருந்தார்கள். முதலில் கணவன் அவளைக் கைவிட்டுப் போனான். அப்புறம் அடுத்தடுத்துப் பையன்களில் இளையவன் நோயிலும் மூத்தவன் நீரில் மூழ்கியும் போனார்கள்.

இளையவனுக்கு ஒரு விசித்திரமான நோய். மூன்று வயதான அவனுக்கு அந்த நோய் வந்ததும் உடல் பின்னோக்கிக் குறைய ஆரம்பித்தது. ஒரு வருஷத்தில் அவன் பழையபடி ஒரு கைக் குழந்தையாகி விட்டான். வயிறு மட்டும் ஐந்து வயது பையன் போல இருந்தது. அவன் மீள்வான் என்ற நம்பிக்கை யாருக்கும் இல்லை. அவளுக்கும் கூட இருந்திருக்க முடியாது. தண்ணீர் தூக்குவதற்கு இடையிடையே போய் ஏதாவது ஊட்டி விட்டு வருவாள். அவன் இறந்த போதும் அவ்வளவாக அலட்டிக் கொண்டதாகத் தெரியவில்லை.

மூத்த பையன், அவனுக்கு ஏழெட்டு வயதிருக்கும். மாடு மேய்க்கிற போது எருமை மாட்டின் முதுகிலேறி, அது தண்ணீருக்குள் ஓடி விழுந்துவிட நீச்சல் தெரியாததால் மூழ்கி இறந்து போனான். அப்போது மட்டும் இவள் இரண்டு நாளோ மூன்று நாளோ

ஒருவர்: "குப்பைக் கூடையை ஏன் உருட்டிக் கொண்டிருக்கிறாய், தம்பி?"
பையன்: "பாப்பாவுக்கு வேடிக்கைக் காட்ட."
அவர்: "பாப்பா எங்கே இருக்கிறது?"
பையன்: "கூடைக்குள்ளே!"
—ஏ. எஸ். சியாமளா.



துக்கப் காத்த மாதிரி இருந்தது. அப்புறம், இந்தத் தண்ணீர் சுமக்கிற தொழிலும் சந்தோஷமும் இருக்கிறபோது யார் போனால் என்ன என்கிற மாதிரி பழையபடி வந்து பானைகளைப் பிடித்து விட்டாள்.

அப்புறம் அந்த மூவரையும் பற்றி அவள் ஏதாவது பேசி யாரும் கேட்டதில்லை.

இல்லை, இல்லை. அவளது புருஷனைப் பற்றி ஒரு தடவை பேசினாள். இரண்டு வருஷங்களுக்கு முன் அவளது புருஷன் மீண்டும் இந்தக் கிராமத்திற்கு வந்திருந்தான். ஆனால் அவன் யாரும் எதிர்பார்க்காத ஒரு தொழிலை எடுத்து வந்திருந்தான்.

ஒரு சிறுவன் தலையில் மாரியாத்தாள் பீடத்தை வைத்து, கையில் ஒரு விபூதித் தட்டைக் கொடுத்து, இவன் முன்னால் நின்று ஆடிக் கொண்டிருக்கும் கயிற்றுச் சவுக்கால் உடம்பில் சொடேர் சொடேர் என்று அடித்துக் கொண்டு காசு வசூலித்து வந்தான். அவனை அடையாளம் கண்டு கொண்ட சில சிறுவர்கள் ஓடி வந்து 'மொட்டே மொட்டே, ஒன் புருஷன் வந்திருக்கு' என்று சொன்னதோடு அவன் வந்திருக்கும் விதத்தையும் சொன்னார்கள். அதைக் கேட்டுச் சில விநாடிகள் வெற்றுவெளியை வெறித்த இவள் சொன்னது: 'போறான் பொசகெட்டவன் போ.'

இப்படிப்பட்டவள் ஒரு நாள் தன் தொழிலைப் பிரிந்து போனாள்.

தனது தங்கச்சி வீட்டு விசேஷம் ஒன்றிற்காகத் திண்டுக்கல் வரை போய்விட்டு ராத்திரி வண்டிக்கே திரும்பி விடுவதாகவும் இந்த ஒரு நாளைக்கு மட்டும் எப்படியாவது சமாளித்துக் கொள்ளும்படியும் எல்லாரிடமும் சொல்லிவிட்டுப்போனவள் அப்புறம்வரவே இல்லை.

ஒரு வாரம் கழித்துதான் அவளைப் பற்றிய செய்தி வந்தது. அங்கே புதிதாக ஆரம்பிக்கப் பட்ட ஒரு சின்ன பலகாரக் கடையில் அவள் மாவரைக்கவும் பத்துப் பாத்திரம் தேய்க்கவும் வேலைக்குச் சேர்ந்துவிட்டதாகச் சொன்னார்கள்.

இங்கே வாடிக்கைக்காரர்கள் சும்மா திண்டாடிப் போனார்கள். இவள் வர மாட்டாள் என்பது முடிவானதும் யாரிடமாவது போய் முடியுமா என்று கேட்டால் அவர்கள் ஒன்றிற்கு மூன்றாகக் கூலி கேட்டார்கள். வருவதற்கு முன்பே இத்தனை குடம்தான் ஊற்ற முடியுமென்று நிபந்தனை போட்டார்கள். அது எப்படித்தான் அவர்களுக்குத் தெரிந்திருந்ததோ, 'விவசாய மேஸ்திரி வீட்டுத் தொட்டி இருபது குடம் பிடிக்குமாமே' என்று கேட்டார்கள். 'நருசு அம்மா தண்ணியை சும்மா மொண்டு மொண்டு ஊத்துமாமே' என்றார்கள்.

அப்புறம்தான் மொட்டையின் மலிவும் பெருமையும் இவர்களுக்குப் புரிந்தது.

இரண்டு வாரம் கழித்து மொட்டை வேலைக்குச் சேர்ந்த பலகாரக் கடையின் முதலாளி யார் என்பதும் தெரிந்தது. அவன் இதே

## நெல்லை மாவட்டம் முத்தாலங்குரிச்சியை தாய்பூமியாகக்

## கொண்டுள்ள பெருமக்களுக்கு ஓர் அன்பு

## வேண்டுகோள்

நம் மாவட்டத்தில் தாமிரபரணி மேற்குக் கிழக்காகப் பாயும் நிலைமாறி வடக்கு—தெற்காகப் பாய்ந்து வளம் சேர்க்கும் நிலப்பரப்பில் நடுநாயகமாக ஆற்றின் மேற்கரையில் அமைந்து விளங்கும் சின்னஞ்சிறு ஊராகிய நம் முத்தாலங்குரிச்சியில் வடதிசை நோக்கி அமர்ந்து அருள்பாலிக்கும் நல்லான்பிள்ளை பெற்றாள் என்ற குணவதிஅம்பாள் திருக்கோயிலையும் அருள்மிகு லக்ஷ்மிநரஸிம்மராக திருமால் அர்ச்சை நிலையில் அருளாட்சி செலுத்தும் பெருமாள் திருக்கோயிலையும், அன்னை சிவகாமி அம்பாள் சமேதராக அருளோச்சும் வீர பாண்டீசுவரர் திருக்கோயிலையும், செம்மைப்படுத்தி, புதுப்பித்து, புனிதமான குடமுழுக்கு விழா நடத்திட இறையருள் வந்ததால் எண்ணியுள்ளோம். இந்தியா தழுவி வாழும் முத்தாலங்குரிச்சியின் நன்முத்துக்களை மேற்படி இறை பணிக்கு தங்களை ஆட்படுத்திட கீழே குறிப்பிட்டுள்ள எங்களில் எவருடனாவது தொடர்பு கொள்ள பணிவுடன் வேண்டுகிறோம்.

தங்கள் தொடர்பினை நாடும்,

i) Sri S. அய்யாசாமி அய்யர், முன்னாள் கிராம முன்சீப்,
33, சின்ன தட்டாக்குடி தெரு, திருநெல்வேலி ஜங்ஷன்.

ii) Sri N. சீனிவாசன், Rtd. சிவில் இஞ்சினியர், India Cements,
சங்கர் நகர்—627 357.

iii) Sri P.V. சங்கர தீட்சதர், 167, பல்லவன் தெரு,
சென்னை—600 087.

iv) Sri N. நடராஜ அய்யர், Liasion Officer, India Cements, 133/6,
தாழையூத்து, சங்கர் நகர்—627 357.

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி
# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் ப்ரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,**
**வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

ஊரைச் சேர்ந்த சாட்சாத் அய்யாக்கண்ணுவேதான்.

அய்யாக்கண்ணு தாரமிழந்த சுமார் நாற்பது வயது ஆசாமி. பிள்ளைக் குட்டி கிடையாது. சமையல் வேலைதான் தெரிந்த வேலை. கடைகளிலும் அங்குமிங்குமாகவும் இருப்பான். முதல் தாரத்திற்குப் பின் யாரும் பெண் கொடுக்க முன் வராததாலும், யாரிடமும் போய்க்கேட்கிறயோக்கியதை தனக்கு இல்லையென்று அவனே நினைத்ததாலும் அப்படியே இருந்துகொண்டிருந்தான். ஏழெட்டு வருஷங்களுக்கு முன் ஊரை விட்டுப் போனவன் இப்போது எப்படியோ தத்தி முத்தி ஒரு கடை வைத்திருப்பான் போலிருக்கிறது.

அந்த வாரம் அவனே ஊருக்கு வந்திருந்தான். அவனுக்குத் திண்டுக்கல்லில் இருக்கும் மொட்டையின் தங்கையைத் தெரியுமாம். அவள்தான் அக்காள் இங்கேயே இருக்கட்டும் என்று வற்புறுத்தினளாம். அவனை விசாரித்த போது மொட்டை அங்கு நன்றாக இருப்பதாகவே சொன்னான்.

சுமார் இரண்டு மாதம் கழித்து ஏதோ இருந்த ஒன்றிரண்டு அலுமினியச் சாமான்களை எடுத்துக் கொண்டு போவதற்காக மொட்டையே இங்கு வந்திருந்தாள். அய்யாக்கண்ணு சொன்னது சரிதான். அவள் யாரும் எதிர்பார்க்காத அளவில் நன்றாகவே இருந்தாள். உடம்பு ஒரு சுற்று கூடியிருந்தது. புதுநிறம் போட்டிருந்தது. முகத்தில் கொஞ்சம் களை. நல்ல சேலை.

ஆனால் தலை மட்டும் மொட்டையாகவே இருந்தது. யாரோ கேலியாக அதை வளர்த்துக் கொள்ளக் கூடாதா என்று கேட்டதற்கு 'ஊக்கூம்' என்றாள்.

போகும்போது எல்லாரிடமும் சொல்லிக் கொண்டு போனாள்.

அப்புறம் சுமார் ஒரு மாதம் போயிருக்கும்.

ஊர் ஒரு வழியாக அவளை மறந்து முடித்துவிட வேண்டிய கட்டம்.

ஆனால் ஒருநாள் காலை ஊரில் ஒரு சின்ன பரபரப்பு.

'மொட்டை - பழையபடி இந்த ஊருக்கே தண்ணீர் தூக்கிப் பிழைக்க வந்து விட்டாளாம்.'

'மொட்டை வந்தாச்சு, மொட்டை வந்தாச்சு' என்றார்கள்.

பழைய வாடிக்கைக்காரர்களுக்குப் பெரிய நிம்மதி. யாரோ அன்று காலையே தங்கள் வீட்டில் தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்த மாதை நிறுத்தி விட்டதாகச் சொன்னார்கள்.

ஆனால் ஊரில் ஒருவர் தவறாமல் எல்லாரிடத்திலும் உண்டான கேள்வி: 'அந்த வசதியை விட்டுவிட்டு இவள் பழையபடி ஏன் இங்கு தண்ணீர் சுமந்து சாக வந்திருக்கிறாள்?' பலபேருடைய அனுமானம், அய்யாக்கண்ணு கடையை மூடியிருக்கலாம் என்பது. அவ்வளவாக பிழைக்கத் தெரியாத ஆசாமி அவன்.

ஆனால் விஷயம் அதுவல்ல. மொட்டையே 'அதெல்லாம் கடெல்லாம் நல்லதான் ஓடுது'



# பூவுலகில் ஒரு சொர்க்கம்

**போட்டி: 11**

''பூவுலகில் ஒரு சொர்க்கம் உண்டானால் அது இதுதான்'' என்று மொகலாய மன்னர்கள் தங்கள் நந்தவனங்களில் பொறித்தனர். நீங்கள் உங்கள் வீட்டை எப்போது எந்த சந்தர்ப்பத்தில் சொர்க்கத்துக்கு நிகராகக் கருதினீர்கள்? கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பவும். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்! உறையின் மேல் ''பூவுலகில் ஒரு சொர்க்கம்'' என்று குறிப்பிட மறவாதீர்கள்!

**முடிவு தேதி: 29.7.85**

**இன்னும் 42 விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்கள் காத்திருக்கின்றன. அவற்றில் ஒன்றைப் பெற்றே ஆக வேண்டும் என்ற ஆர்வத்துடன் வாராவாரம் போட்டியில் பங்கு பெறவும்.**

என் பெயர்: ..............................................

விலாசம்: ..............................................

..............................................

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

என்று சொல்லிவிட்டான்.

அப்புறம் என்ன காரணம்?

மொட்டை மௌனம்சாதித்துக்கொண்டு. உமையாள் ஆச்சி, தனலெட்சுமி எல்லோரிடமும் பழையபடி 'தண்ணி எடுக்கவா' என்று விசாரித்துக் கொண்டு வந்தான்.

மொட்டைக்கு ரொம்பவும் நெருக்கமானவர்கள் பாப்புவும், முத்தானும். வாசலில் உரலில் சோளம் குத்திக் கொண்டிருந்த அவர்கள் இவன் தெருவில் வரும் போது மடக்கிப் பிடித்தார்கள்.

"ஏ மொட்டே, இங்கே வா."

'என்னு?' என்று வெள்ளையாகக் கேட்டுக் கொண்டே அவர்களிடம் வந்து நின்றான் மொட்டை.

தனக்கும் அவனுக்குமிருந்த நெருக்கத்தைச் சலுகையாக எடுத்துக் கொண்டு பாப்பு கடுப்பாகக் கேட்டான், "ஏன், தலையில தண்ணிப் பானை இல்லேன்னு இடுப்பு சீலை இல்லாத மாதிரி இருக்கோ?"

"யேன்?"

"பின்ன அங்கக் கடைய விட்டுட்டு ஏன் வந்தே? அங்க நாலு பாத்திரம் கழுவிக் குடுத்துட்டு நெழல்ல கெடக்குறதுக்கு கசக்குது; இங்க வந்து வெயில்லயும் மழையிலயும். நடந்து சாவுறது இனிக்கிதா?"

மொட்டையிடம் பதில் இல்லை.

"அந்த ஆளு சம்பளம் எல்லாம் ஒழுங்கா குடுத்துச்சு இல்ல?"

"ம்."

"பின்ன என்னு?"

மௌனம்.

"தங்கச்சிகிட்ட ஏதாச்சும் கோவமா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்ல."

"பின்ன ஏன் வந்தே?"

மௌனம்.

"இதுதான் தின்னுக் கொழுத்தா நண்டு வளையில தங்காதுன்னு சொல்றது இல்ல?"

இதைக் கேட்ட போது மொட்டையின் முகத்தில் திடீரென்று ஒரு ரோஷப்பட்ட கோபம். அது பாப்புவும் முத்தானும் சற்றும் எதிர்பாராதது. அவன் முகம் சிவக்க வலது கையைப் பாப்புவின் முகத்திற்கு நேராக நீட்டிச் சொன்னான்: "அட, அவன் எனக்குப் பெண்டாட்டியா இருடினு சொல்றான்."

பாப்புவும் முத்தானும் திகைத்துத்தான் போனார்கள்.

சிறிதுநேரம் அங்கே ஒருபேச்சும் இல்லை.

மொட்டை 'வாரேன்' என்றுசொல்லாமல் கூடப் புறப்பட்டான்.

அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தனர் பாப்புவும் முத்தானும். அவர்களுக்கு என்ன அபிப்பிராயம் கொள்வதென்றே தெரியவில்லை.

அது ஒரு நிமிஷம்தான். அப்புறம் அபிப்பிராயம் வந்துவிட்டது. சீக்கிரம் அவர்கள் முகங்களில் இருந்த திகைப்பு மறைந்து, ஒரு மெல்லிய புன்னகை தோன்றி வளர ஆரம்பித்து விட்டது.

முத்தானு போய்க் கொண்டிருந்த மொட்டையின் முதுகைப் பார்த்தபடியே மெல்லச் சொன்னான்: "இருடினு இருந்துட்டுப் போறது?"

பாப்புவிடம் ஒரு கணக்குச் சிரிப்பு. அவனும் 'அதானே' என்று மொட்டையின் முதுகைப் பார்த்தான். அப்புறம் இருவரும் கொஞ்சம் கற்பனையில் இறங்கி உள்ளுக்குள் பெரிதாகவே சிரித்துக் கொண்டே உலக்கையை உரலில் இறக்கினார்கள்.

இது அந்த இருவர் அபிப்பிராயமாக மட்டும் இருக்கவில்லை. சேதி காதுக்குவந்தபோது அநேகமாக ஊரில் எல்லோருமே அப்படித்தான் நினைத்தார்கள். இது அவனது தகுதிக்கு மேற்பட்ட வசதி என்பது அவர்கள் கணக்கு. தாராளமாக அவனது உறவை அங்கீகரித்திருக்கலாம் என்பது அவர்கள் எண்ணம். அவன் இருக்கும் நிலைக்கு என்ன கெட்டுப் போச்சு என்பது கேள்வி.

அதன் பிறகு ஒரு மாதத்திலோ இரண்டு மாதத்திலோ அய்யாக்கண்ணுவே இங்கே ஏதோ வேலையாக வந்திருந்தான். அவனிடம் சிலர் தமாஷாக என்னப்பா சேதி என்று கேட்ட போது அவன் வெகு சாதாரணமாக 'அவ கெடக்குறா லூசு' என்று நழுவிக்கொண்டான்.

இப்போது மொட்டை, ஊருக்கு அதே பழைய மொட்டையாகிவிட்டான்.

அதே ஐந்தாறு வீடுகளுக்குத் தண்ணீர் சுமந்து ஊற்றுகிறான்.

அவர்கள் அவன் இல்லாதபோது உணர்ந்த அவனது அருமை பெருமைகளையெல்லாம் மறந்துவிட்டுச் சலித்தும் கோபித்தும் வேலை வாங்குகிறார்கள்.

உடம்பு இளைத்துப் போய் விட்டது. இன்டுக்கல் தந்த புதுநிறம் போய்விட்டது.

அந்த இரண்டு மாத நிழல் வாழ்க்கை குறித்து அவனது நினைவுத் திரையில் ஒரு சின்னச் சுவடு இருப்பதாகக் கூடத் தெரியவில்லை.

ஊரில்தான் யாராவது எப்போதாவது அதை நினைத்துக் கொண்டு தமாஷாக அவனைச் சீண்டிப் பார்க்கிறார்கள். அதில் அவர்கள் வெற்றி காணும்போது அவன் அதே ரோஷப்பட்ட கோபத்தோடு முகம் சிவக்க, வலது கையை நீட்டி 'அட அவன் எனக்கு...' என்று அதையே சொல்கிறான். அதை அவர்கள் ரசிக்கிறார்கள்.

நீங்கள் விரும்பினால் இப்போதும் அவனை அந்தக் கிராமத்தில் பார்க்கலாம்.



# நெஞ்சம் மறப்பதில்லை

''அவ சாவித்திரியா இருந்தா, இவன் நாகேசுவரராவா மாறலாம். நியாயம். என்ன மாந்திரி மினுக்கரு! தனுக்கு என்ன! குலுக்கு என்ன? பரம் பரையாகப் பட்டணத்துக்காரி மாதிரி. சே... அவளுக்காக இவன் ஏங்கறன். வெக்கக் கேடு''

உண்ணாமுலை தன் குழந்தை அருணை வைக் கொஞ்சட்டும். முத்தமாரி பொழியட் டும். உள்ளம் பூரிக்கட்டும். கன்னையாவைப் பாதிக்காத வகையில் செய்யலாமே!

கன்னையா ஏற்கெனவே அரைப்பைத்திய மானவன். உண்ணாமுலையின் செயல் அவனை மேலும் குழப்பியது.

கன்னையாவின் கரம் பிடிக்காமல் பட் டணத்தானை மணந்து அவனோடு வாழும் அன்பு வாழ்க்கையின் வெற்றியாக மகள் அருணைவைப் பெற்றவள் உண்ணாமுலை. காதலி. கன்னையாவின் வாழ்வில் வெறு மையை ஏற்படுத்திவிட்டுப் பட்டணம் சென்ற வள்..அவ்வப்போது சொந்தஊருக்குவராமல் இருக்கலாமே! வந்தாலும் வீட்டுக்குள்ளேயே அடங்கிக் கிடக்கலாமே! எதிர் வீட்டு மச் சான் கன்னையாவின் மனம் நோகக் குழந் தையைக் கொஞ்சுவதும், கணவனுடன் சேர்ந்து அடிக்கடி கண்டவீதி போவதும், கிராமப்புறம்என்றும்பாராமல்கணவனுடன் வேடிக்கையாகப் பேசியபடி தெருவில் நடப் பதும் தேவைதானா?

''மச்சான்! இப்போது எனக்கென்ன குறைச்சல்?'' என்று குறிப்பாகச் சொல்கிறா ளோ? ஒரு காலத்தில் கன்னையாவின் உயி ராய் இருந்தவள் அவள். எல்லாம் மறந்தாள்.

துரையப்பன் கன்னையாவின் தோள்களில் கைவைத்து அசைத்து, ''ஏண்டா, கன்னையா, களை பிடுங்கக் கூலியாளுங்களை வரச் சொல் லிட்டியா?'' என்று கேட்டான்; கன்னை யாவின் அருகில் உட்கார்ந்தான்.

''களை பிடுங்கணுமா? எங்கே? எதுக்கு? குழப்பத்துடன் கேட்டான் கன்னையா. அடப் பாவி! வெங்காயத் தளையில் உடனே களை பிடுங்க வேண்டும் என்று முதல் நாள் இரவில் பேசியது மறந்து போயிற்றா?

துரையப்பன் கன்னையாவிடம் வந்ததும், உண்ணாமுலை உள்ளே போய்விட்டாள்.

''மடப்பயமவனே! என்னகேடுகாலம்டா? பொன்னு விளையற பூமியை ஏண்டா பாழாக் கறே? தரிசாகப் போட்டுட்டே! பாழாவறது, தரிசாவறது உன்னோட வாழ்க்கைடா.''

கன்னையா துரையப்பனின் பேச்சைச் செவியில் ஏற்றவில்லை. முகத்தில் அதே மண் டுகக் களை.

எதிர்வீட்டிலிருந்து குபீரெனக் கிளம்பிய சிரிப்பலைகள் துரையப்பனின் காதில் விழுந் தன. உண்ணாமுலையும், அவள் கணவன் கணேசனும் ஏதோ அரட்டை அடிக்கிறார் கள்.

''கௌம்புடா கன்னையா.... டீ சாப்புட்டு ஆள் புடிக்கப் போவலாம்''. துரையப்பன் கன்னையாவை இழுத்துக் கொண்டு கடை வீதிக்குக் கிளம்பினான்.

* * * * *

சம்பத் டீக்கடையில் எப்போதுமே கூட்டம் அதிகம். தேநீர் பருக வருவோர், செய்தித்தாள் படிக்க வருவோர், வெறும் அரட்டைக் கச்சேரிக்கு வருவோர்.... எப் போதும் கலகலப்புத்தான்.

''வா மச்சான்....'' சம்பத் கன்னையாவை வரவேற்றான்.

வரவேற்பைப்பொருட்படுத்தாமல்தெற்கு மூலையில் காலியாக இருந்த பெஞ்சில் உட் கார்ந்தான்.

**கா.ப.ரா**



''அண்ணே! ஆளுக்கு ரெண்டு மசால் வடை வை....'' துரையப்பன் சம்பத்திடம் சொன்னான். துரையப்பன் வடையைச் சுவைத்து மென்றான். கன்னையாவுக்கு வடையும் ஒன்றுதான், வரட்டியும் ஒன்றுதான்.

''அண்ணாத்தே! கொட்டாய்லே என்ன படம் ஓடுது?'' சம்பத், ஆபரேடர் சிவாவைக் கேட்டான்.

''தேவதாஸ்.''

''பழைய படம். ஆனா பாட்டுங்க அருமை'' என்றார் கண்ணுசாமி. முன்னாள் பஞ்சாயத்து உறுப்பினர்.

''பழைய படம்னா என்னா? சாவித்திரி மேலே நாகேசுவரராவ் பைத்தியமா ஆயிடறார். உலகே மாயம்னு பாடற காட்சியிலே எனக்கே அழுகை வரும். சாவித்திரி வயசானவரைக் கண்ணாலம் கட்டிக்கிட்டாலும் நாகேசுவர ராவையே நெனைச்சுப் புலம்புறா. ஐயோ பாவம்னு நாமும் அழுவறோம்.''

''இந்த முண்டத்தைப் பாரேன், சிவா! பைத்தியமாயிட்டான். நெலம் பாழாப் போவுது... வெள்ளாமை இல்லே. பயிரெல்லாம் சாவியாயிடுச்சி. வாழ்க்கையே சாவியானப்புறம் பயிர் சாவியானா என்னங்கிறான்? துரையப்பன் கன்னையாவைப் பற்றிச் சிவாவிடம் புகாராகச் சொன்னான்.

செவி மடலில் பதுங்கியிருந்த துண்டு பீடியைப் பற்றவைத்தான் கன்னையா.

''அவ சாவித்திரியா இருந்தா இவன் நாகேசுரராவா மாறலாம். நியாயம். என்ன மாதிரி மினுக்கறா! தளுக்கு என்ன! குலுக்கு என்ன! பரம்பரையாகப் பட்டணத்துக்காரி மாதிரி.... சே.... அவளுக்காக இவன் ஏங்கறான். வெக்கக்கேடு'' துரையப்பன் வெகுண்டான்.



''டேய்'' கன்னையாவின் குரல். அனைவரும் அவனையே பார்த்தனர்.

''நான் கன்னையாடா.... யாருக்காகவும் நான் இனிமேல் உருக மாட்டேன்டா.... நான் நாறுகிவிட்டேன்டா...'' கன்னையா துரையப்பனைப் பார்த்து முழங்கினான். உண்ணுமுலையின் கர்வம், காதலை மறந்த கர்வம் கன்னையாவைப் பாதித்ததோ!

* * * * *

ஆரணிக்கருகே சேலூர். பரம்பரையாகச் சொந்த நிலத்தில் உழுதுண்ணும் குடியானவர்கள் நிறைந்த ஊர். எதிர்வீட்டு நாகப்பனும், கன்னையாவும் உறவினர்கள். இருவருடைய நிலங்களும் அக்கம் பக்கம் இருந்தன. நாகப்பன் மகள் உண்ணுமுலையைக் கன்னையா மணப்பதாகப் பேச்சு. நாகப்பனுக்கு 'நாஷ்டா' எடுத்துக் கொண்டு வயலுக்குப் போகும்போது, கன்னையாவின் தாய் மகனுக்குரிய பழைய சோற்றையோ, கூழையோ, உண்ணுமுலையிடம் கொடுத்து மகனிடம் தரச் சொல்லுவாள். உண்ணுமுலை உற்சாகமாகக் கொண்டு போவாள். மச்சானுக்குத் தானே பரிமாறுவாள். கேலியும், குறும்பும், கிண்டலும் விடுகதையுமாக உண்ணுமுலையும் கன்னையாவும் பழகினர். அடுத்து வருகிற தையில் திருமணம்.

இடையே ஒரு தகராறு. ஏரித் தண்ணீரை மடைகட்டுவதில் பிரச்னை. இணக்கமாக இருந்த நாகப்பனும், கன்னையாவும் முரண்பட்டனர். உறவு முறிந்தது. பட்டணத்து உறவினன் கணேசனுக்கு உண்ணுமுலை மனைவியானாள். கன்னையா பைத்தியமானான். இதோ இரண்டு வருடங்களாக அவன் வாழ்வு திசை மாறிவிட்டது.

* * * *

''சமாச்சாரம் தெரியுமா, உண்ணுமுலை?'' என்று தோழி வள்ளி வினவினாள்.

''என்ன?''

''கன்னையாவுக்குக் கண்ணாலம் கூடி வருது. எப்பவோ ஆகியிருக்கணும். தடம் மாறிப் போச்சு...''

''மச்சானுக்கு முடிச்சு அங்கேதான் போட்டிருக்கு, விதி.''

''இப்பவாவது அவன் மனம் மாறுச்சே! சதா உன்னையே நெனைச்சி நெனைச்சி மாய்ஞ்சு போனான்டி....''

''அவரோட இஷ்டம். யார் என்ன செய்ய முடியும், வள்ளி, இப்பவாவது பைத்தியம் போச்சே!''

* * * * *

மங்கம்மா அழகி. வசதியான வீட்டுப் பெண். குணத்திலும் உண்ணுமுலையை விட உயர்ந்தவள். மாசி மாதம் வளர்பிறையில் கன்னையாவுக்கும் அவளுக்கும் 'கண்ணாலம்'. கன்னையா கடந்த இரண்டாண்டுகளாக இழந்த சுகங்களை மீட்டுத்தர வல்லவள் இந்த மங்கம்மா. எல்லாம் துரையப்பன் ஏற்பாடு.

* * *

மேலட்டை:

வண்ணப்படம் வழங்குபவர்:

யோகா

''ஒனக்கே நல்லா இருக்கா உண்ணுமுலை?'' என்று வள்ளி கேட்டதை உண்ணுமுலை அலட்சியப்படுத்தினாள். ''கண்ணாலம் அவங்கவீட்டிலே. நமக்கென்ன இதில்? அவரு ஓட்டலில் சாப்பிடறார். ஒடம்பு கெட்டுப் போகும்டி.... கட்டாயம் நான் மெட்ராஸ் போவணும்! கண்ணாலம் வரை நான் இங்கே இருக்க முடியுமா?''

''கண்ணாலத்துக்காவது வரியா?''

''வெத்தலை பாக்கு வைச்சு யாரும் எங்களை அழைக்கலே.''

உண்ணுமுலை வண்டியில் ஏறி அமர்ந்தாள். நேராகப் பஸ் ஸ்டாண்ட் போக வேண்டும். பட்டணம் பஸ்ஸில் ஏற வேண்டும். கணவன் இந்தக் குறிப்பிட்ட பஸ்ஸில் இவள் வர வேண்டும் என எழுதியிருந்தான்.

வள்ளியும் வண்டியில் ஏறினாள்.

''போய் வரேம்பா... போய் வரேம்மா.''

''போய் வா கண்ணு....''

கண்ணீர் திரையிடக் கண்களைத் துடைத்துக் கொண்டாள் உண்ணுமுலை. வள்ளி குழந்தையைத் தன் மடியில் வைத்துக் கொண்டாள். பெற்றவர்கள் பின்னால் வர வண்டி புறப்பட்டது. அக்கம்பக்கத்தார் வேடிக்கை பார்த்தனர். கன்னையா வீட்டிலிருந்து யாரும் வெளியே வரவில்லை.

ஊர்க்கோடி. பெற்றோர் விடை பெற்றனர்.

இதயச் சிறையை உடைத்துக் கொண்டு அழுகை பீறிட்டது. கட்டுப்படுத்த முடியவில்லை.

''இதுக்கேன் அழுவறே உண்ணுமுலை. நெனைச்சா அடுத்த மாசமே வந்து போவலாமே! இங்கே வரணும்னு தோணிச்சா, மாப்பிள்ளை அனுப்பி வைப்பாரே! நான் சொல்றேன்னு கோபிச்சுக்காதே! இனிமேல் ஆத்தா வீட்டில் பாசம் குறைச்சுக்கோ'' வள்ளி, உண்ணுமுலைக்கு ஆறுதல் கூறினாள்.

வள்ளியின் ஆறுதல் உரை உண்ணுமுலையைப் பாதிக்கவில்லை. ''அப்பாடி! மச்சான் என்னை மறந்து, பொண்ணு பாத்து நாள் குறிச்சுட்டார். இனிமேலாவது நல்லாயிருப்பார். அவர் மனசு மாறி என்னை வெறுக்கணும்னு நான் என்ன மாதிரியெல்லாம் நடக்க வேண்டியதாச்சு! வெக்கம் கெட்டு அவர் முன்னடிக் கொழந்தையை முத்தந் தந்து கொஞ்சறதும் ஊரார் பார்க்க, ஆம்படையானோடு அரட்டையடிக்கறதும்... அவர் மனசை புண்படுத்தி.... புண்படுத்தவே தான் மனசு மாறினார். இனிமே நல்லபடி இருப்பார்...'' என்று உண்ணுமுலை தனக்குள் சொல்லிக் கொண்டதை வள்ளி கேட்க முடியாதே!

ஆம், அவள் தேவதாஸின் பார்வதிதான். வாழவைக்கும் பார்வதி!




# பிலிப்ஸ்

# தோற்றத்தில் எல்லா பல்புகளும் ஒன்றுதான்

# ஆனால், பிலிப்ஸ் எனும்போது தரம் பளிச்சிடும்

தோற்றத்தைக் கண்டு பொருளை நிர்ணயிக்கலாமா? தரத்தினைப் பற்றியும்
நம்பகம் வேண்டும். பிலிப்ஸ் பல்புகளையே வாங்கிட உறுதிகொள்வீர்.
அதன்மூலம், நீடித்திருக்கும் பளிச்சிடும் வெளிச்சம் உங்களுக்குக்
கிடைக்கிறது; உங்கள் பணத்திற்குத் தகுந்த மதிப்பும்கூட.
பிலிப்ஸ் பல்புகள், தரம்பற்றித் தெரிந்தவர்கள்,
தோற்றத்தால் மயங்கலாமா?

PEI-1284

பிலிப்ஸ் – ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்




# ராகமாலிகா பட்டு சேலைகள்

சுகன் ஆர்கேட்,

நெ. 12பி. நாகேஸ்வரராவ் ரோடு, பனகல் பார்க் எதிரில்

தியாகராய நகர், சென்னை-600 017

(ஞாயிறு கடை உண்டு)



# சோம்பல் ஒரு வகையான தற்கொலை

## வாரம் ஒரு கடிதம்

கவிஞர் வைரமுத்து

நம்பிக்கைக்குரியவனே! நல்லவனே! நலமா?

ஏதோ பொழுது போகாமல் உன்னோடு நான் புலம்பிக் கொண்டிருப்பதாய் சில பெரியவர்கள் அளவுக்கு அதிகமாய் அழுகிறார்கள்.

அவர்களுக்கு ஆறுதல் பரிசாகச் சில கைக்குட்டைகளை அனுப்பிவிட்டு நாம் கை கோத்து நடப்போம் வா.

நான் ஒரு மத போதகன் அல்லன் என்பதைச் சொல்லித்தான் எனது முன்னுரைக்கே நான் முற்றுப்புள்ளி வைத்தேன்.

எனக்குத் தெரியாத பக்தியைப் பற்றியோ, கடவுளைப் பற்றியோ, விஞ்ஞானக் கதிர் வீச்சுக்களைப் பற்றியோ விவாதம் செய்வதல்ல எனது வேலை.

இந்தக் கடிதங்கள் எனக்குள் நான் உணர்ந்தவைகளை மட்டும் உணர்த்தும் முயற்சிகள்.

யார் மீதும் இதைத் திணிப்பதோ, இதன் மூலம் இயக்கம் வளர்ப்பதோ எனது நோக்கமல்ல.

எனது சமகால இளைஞனைப் பற்றி ஆத்மார்த்தமான அணுகுமுறை இது— அவ்வளவே.

விமர்சகன் வெறும் ஒட்டகம்;

கனிகளை விட்டுவிட்டு முட்களை மேய்ந்து கொண்டிருப்பவன் — என்ற பழமொழிக்கு அடிக்கடி உரை எழுதுகிறவர்களை நாம் தடுக்க முடியாது.

என்ன எழுதப் போகிறேன் உனக்கு இந்த வாரம்?

நமக்குள்ளேயே இருக்கும் நமது எதிரி ஒருவனை உனக்கு இனங்காட்டுவது எனது கடமை.

தூக்கம் — நீ உறங்கிக் கொண்டிருக்கும் போது உனது நேரத்தை உறங்க வைத்துவிடுகிறது.

ஆனால், சோம்பலோ நீ விழித்துக் கொண்டிருக்கும்போதே உனது நேரத்தை உறங்க வைத்துக் கொண்டிருக்கிறது.

தூக்கம்என்பது கண்களின் தர்மம்; ஆனால் சோம்பல்என்பது ஒருவகையான தற்கொலை.

உனக்குள் இருக்கும் எதிரிகளை ஒழிக்க முடியாமல் நீ யுத்தம் செய்யப் புறப்படுவது உசிதமாகாது.

தன்னைத்தானே வெல்லமுடியாத ஒருவன் அவனியை வெல்வது ஆகாது.

உனது குணாதிசயங்களை நீ கோடு கிழி.

நல்லவை கொண்டு அல்லவை நீக்கு.

தூக்கத்தில் சொறிந்து கொள்வது மாதிரி சோம்பலென்பது ஒரு தற்காலிக சுகம்.

விழித்துப் பார்த்தால் அதுவே ரத்தம் கசியும் ரணமாகவும் வாய்ப்பிருக்கிறது.

நேரத்தை ஒத்தி வைக்கும் ஒவ்வொரு நிமிஷத்திலும் உனது வெற்றி ஒத்தி வைக்கப்படுகிறது.

நாளை என்று தள்ளிப் போடும் நாளிலெல்லாம் உன் எதிர்காலம் இறந்தகாலமாகிக் கொண்டிருக்கிறது.

பரீட்சைக்கு நாள் இருக்கிறது படித்துக் கொள்ளலாம் என்ற கருத்து பல இளைஞர்களின் நெஞ்சில் புற்று கட்டியிருக்கிறது.

இளைஞனே! ஒன்றுசொல்கிறேன் உனக்கு.

நீதான் தேர்வை நெருங்க வேண்டும்; தேர்வு உன்னை நெருங்கக் கூடாது.

தேர்வு வரட்டும் படித்துக் கொள்ளலாம் என்பவன் போர்க்களத்திற்கு முரசறைந்த பிறகு ஆயுதம் தேடி உலைக்களத்திற்கு ஓடுகின்றவனைப்போல் இரங்கத்தக்கவன்.

ஐந்து மணிக்கு அலாரம் வைத்திருப்பாய்.

தன் வேலையை அது சரியாகச் செய்யும்; ஐந்து மணிக்கு அது அடிக்கும்.

நீயோ, நீ செய்த குற்றத்திற்காகக் கடிகாரத்தின் தலையில் அடித்து தண்டித்துவிட்டு போர்வைக்குள் மீண்டும்புதைந்து போவாய்; தூக்கத்திற்குள் மீண்டும் தொலைந்து போவாய்.

என்ன செய்வது? — சோம்பேறிகளின் சொர்க்கத்தில் இமைப்பது கூட அபராதத்திற்குரியது.

சோம்பேறிகள் காலத்தை ஏமாற்ற நினைக்கிறார்கள்.

ஆனால் இந்த விஷயத்தில் மட்டும் ஏமாற்ற நினைத்தவர்கள்தாம் ஏமாந்து போகிறார்கள்.

இளைஞனே! சோம்பல் சிறையை விட்டு வெளியே வா. சுற்றுகின்ற பூமி சுறுசுறுப்பாக இருக்கிறது.



சத்யஜோதி பிலிம்ஸ்

G.தியாகராஜனின்

சுபம்
4 காட்சிகள்
புவனேஸ்வரி
பிராட்வே
கமலா
3 காட்சிகள்
மற்றும் தமிழகமெங்கும்

# பகல் நிலவு

(மணிரத்னம்)

இளையராஜா G.சரவணன்

A.L. நாராயணன் ராமசந்திரபாபு B. லெனின் [illegible] சுப்பராயன் சுந்தரம்

# வட்டமேஜை

## ஆயிரம் கதைகள்

இயல்பான முக வசீகரம்—புன்னகையையும் மீறிக் கொண்டு அதில் தேங்கின லேசான சோகக் கீறல் சொன்ன ஆயிரம் கதைகள்—அட்டைப் படத்தைத் திருப்பவே மனசில்லை சார்!

பெங்களூர். கே. கணேசமூர்த்தி

பானர்ஜியின் பின் அட்டை வண்ணப்படம் ஏ.ஒன்.

தஞ்சாவூர். பொக. சேஷாத்திரி.

## ஆந்திராவுக்கு அனுப்புங்கள்

திருமதி பானுமதி ஆந்திராவில் தமிழ் பாடல்களை சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்துவிட்டு (இசைக்குத்தான் மொழி இல்லையே!) பின்பு இங்குள்ள தமிழ் வெறியர்களின் கொட்டத்தை அடக்க முயற்சி எடுக்கட்டும்.

சென்னை—34. ஜ. இராமச்சந்திரன்.

தகுதியும் திறமையும் வாய்ந்தவரைத்தான் இசைக் கல்லூரி முதல்வராக தமிழக முதல்வர் நியமித்திருக்கிறார் என வருங்காலம் கூறத்தக்க வகையில் திருமதி பானுமதி செயலாற்றத்தான் போகிறார்.

போடிநாயக்கனூர். எஸ். சையது முகமது.

நான் பிறந்த நட்சத்திரம் "ரேவதி". அதனால்தான் ரேவதி ப்ரியன் என்று பெயர் வைத்துள்ளேனே தவிர, நடிகை ரேவதியின் மீது உள்ள பிரியத்தால் அல்ல என்பதைத் தராசுக்குத் தெரியப்படுத்துகிறேன்.

ஈரோடு. ஸ்ரீ ரேவதி ப்ரியன்.

இத்தனை லீவுகள் இருந்தும்
இருபதிலிருந்து பன்னிரண்டாக
குறைந்த கேசுவல் லீவால்
இழந்தோமே மகிழ்ச்சியை!

கும்பகோணம். எஸ். பாலசுப்பிரமணியன்.

குற்றவாளிகள் அமைச்சர்களானால்போலீஸ்யாரை விசாரிப்பது? என்ற கடைசி பக்க கட்டுரை, 'சட்டத்தின் முன் அனைவரும்சமம்' என்றகோஷம் இந்தியாவைப் பொறுத்தவரை பொய்யே என்பதை நிரூபிக்கிறது. வேலியே பயிரை மேய்ந்தால்.....

திருச்சி. எஸ். கே. பாரி.

## குட்டி பாகிஸ்தான்கள்

பம்பாயின் பொருளாதார வளர்ச்சியில் தமிழர்கள் முக்கிய பங்கு வகிக்கிறார்கள். ஆகையால் தமிழர்களை வெளியேறச் சொல்வதால் பொருளாதாரம் வீழ்ச்சியடையுமேயன்றி [illegible] ர்ச்சியடையாது. இப்படி இருக்கையில் 'இது [illegible] பாருளாதாரப் பிரச்னை தானே தவிர [illegible] 'னை அல்ல' என்ற பால் தாக்கரேயின் கூற்றை [illegible] புரிந்து கொள்ள முடியவில்லை.

பொய்கை. பெ. சங்கரபாண்டியன்.

பால் தாக்கரே கூறியுள்ளதுபோல், அந்தந்த மாநில மக்கள் அந்தந்த மாநிலங்களிலேயேதான் வசிக்க வேண்டும் என்ற ஒரு நிலை ஏற்பட்டால், இந்தியா, இந்தியாவாக இருக்காது. இங்கே பல குட்டி பாகிஸ்தான்கள் தோன்றிவிடும்!

நீடாமங்கலம். எஸ். ஏ. கோவிந்தகுமார்.

கல்கி வாசகர்களுக்கு 'கிராஸ் டாக்' கிலுல் விளைந்த சுவாரஸ்யமான அனுபவங்களைப்படித்தபிறகுநமக்கும் ஒரு 'கிராஸ்டாக்' கிடைக்காதா என்று எல்லோரும் ஏங்க ஆரம்பித்துவிடுவார்கள் போலிருக்கிறது!

நெல்லிக்குப்பம். ரா. ஜோதிராமன்.

செம்பியன் வாசித்த எல்லா செய்திகளுமே ருசிகரமாக இருந்ததோடு, செய்தியின் முடிவில் செம்பியனின் 'காமெண்ட்ஸ்' ரசிக்கும்படி இருந்தது.

கும்பகோணம். கே. பட்டு.

ஆகஸ்ட் மலரில் சரித்திர சக்கரவர்த்தியின் நாவல் வரப்போவதை நினைத்து அந்த பூதும் கல்கி இப்போதே வராதா என்ற ஏக்கம்தான் இப்போது எங்களுக்கு.

மேலணிக்குழி. ஆர். இராஜாமணி.

* தலையங்கம் தொடர்பாக; தங்கள் பிரதிநிதிகள் எவ்வாறு பணிபுரிகிறார்கள் என்று தெரிந்து கொள்ள மக்களுக்கு முழு உரிமை உண்டு. அதனால் சபை உறுப்பினர்களின் பேச்சு, செயல்கள், சபைக்குறிப்பில் இடம்பெற லாயக்கில்லாமல் போனாலும் அவை "மக்களின் குறிப்பில்" இடம்பெற வேண்டும். எனவே அவைகளை வீடியோ படங்களாக எடுக்கவும், பேச்சுக்களை டேப் செய்யவும் அனுமதிக்கப்பட வேண்டும். அப்போதுதான் மக்களுக்குத் தங்களின் பிரதிநிதிகள் செயல்படும் லட்சணம் தெரியும்.

சென்னை—10. வி. விஜயன்.

## ம்... ம்... நடக்கட்டும்!

பிரதமர் ராஜீவைப் பாராட்டற விஷயத்துல கஞ்சத்தனம்னு ஒரு வாசகர் எழுதினதை ஆட்சேபிக்கிற மாதிரி ரெண்டு பக்கம் போட்டோ, அமெரிக்க விஜயத்தைப் பத்தின கட்டுரை.... ம். ம். நடக்கட்டும்....

குரோம்பேட்டை. பி. எஸ். கோவிந்தராஜன்.

(* இக்குறியிட்ட கடிதம் பரிசு பெறுகிறது)

# சட்டசபை நடவடிக்கைகளை வீடியோ படம் எடுக்க வேண்டும்!



*****************************************



*****************************************

# “ஹலோ பாலாஜி இருக்காரா?”

“ஹலோ பாலாஜி இருக்காரா?”

“அரே, ஷைத்தான் கே பச்சே, கோன் ஹை?”

“பாலாஜி சார்தான். ஹிந்தியிலே பேசறீங்களே, நாங்க ஜெயமன்மதன் சார்.”

“வாஹ்ரே வா.... நம்ப லேட்டஸ்ட் ரிலீஸ் ‘அண்ணி’ எப்படி? தலைப்பே குடும்பப்பாங்கா இல்லே?”

“என்னவோ போங்க சார். தலைப்பு குடும்பப் பாங்காத்தான் இருக்கு, கதையும்.....”

“கதைக்கு என்ன மேன் கொறைச்சல்?”

“பாலாஜி சார், நீங்க அனுபவஸ்தர். ராசியான வர். உங்களுக்குத் தெரியாததில்லே. ஆனாலுங் கூட ஒரு அண்ணன், இரண்டு தம்பிங்க, அண்ணி, அப்புறம் ரெண்டு குழந்தைங்க, ஃபாக்டரி யூனியன் தகராறுல அண்ணனைத் தீர்த்துக் கட்டிடறாங்க, அப்புறம் அண்ணி ரெண்டு குழந்தைங்களையும் அண்ணனோட ரெண்டு தம்பிங்களையும் முன்னுக்குக் கொண்டு வரப் பாடுபடுது.... பெரிய மச்சினன் ஒரு பெரிய எடத்துப் பொண்ணு எடுத்து வீணாப் போறான், குடும்பத்துல தகராறுங்கறதெல்லாம், ராக்கெட்டும் ஜெட்டும் பறக்கற காலத்தில வந்து சொல்ற கதையான்னு யோசிச்சுப் பாருங்க....”

“நமக்கு அது தெரியாதுப்பா....லேகஸ் சப்ஜெக்ட்னு சொன்னாங்க. ஷூட் பண்ணிடுங்கன்னுட்டேன்.... மத்தபடி படம்?”

“சரிதாம்மா அண்ணி. அந்த குண்டு ஒடம்புக்கு பாந்தமா இருக்குது. இனிமே இந்த மாதிரி ரோல் தான்னு ப்ராண்ட் பண்ணிடுவாங்களோன்னு பயமா இருக்குது.”

“புவர்மேன். பயப்பட வேண்டியது சரிதா மை டியர் பாய்ஸ், நீங்க இல்லே.”

“அப்புறம், ஜெய்சங்கர், நிழல்கள் ரவி, தீபா, மோகன், ரோகிணி, தனியா ஒரு டெல்லி கணேஷ். இத்தனை பேர்ல அந்த பீட்டர் டெல்லி கணேஷ் தனியா நிக்கறாரு. நல்ல காரெக்டர்.”

“தாங்க்யூ. அவ்வளவுதானே...”

“இருங்க பாலாஜி சார். ரோகிணியும் மோகனும் லவ் பண்றது அதுக்கு முன்னால ஷூ பாலீஷ், கார் ட்ரைவிங்னு கமால் வேலை காட்றதெல்லாம் லேட் ரிஃப்ரெஷ்மெண்ட் மாதிரி இருக்கு. அப்புறம் வானே ஆடற மாதிரி ஆடிகிட்டே ஜனகராஜ் ஒவ்வொரு ‘இது’வுக்கும் மனசில இருக்கிற அகராதியை புரட்டி பட் பட்னு வார்த்தையைப் போடறாரு பாருங்க.... கலகலப்பா இருக்கு.”

“ஓ.கே. பாட்டெல்லாம்....?”

“‘ஆலமரம் போல எங்க குடும்பம்’ பாட்டு இந்த மாதிரி படத்துக்காகவே ஜன்மம் எடுக்கற பாட்டு பரவாயில்லே. ஆனா காதில் ஒலித்துக் கொண்டே இருக்கிறதுன்னு சொல்ற மாதிரி எதுவும் அமையலீங்களே....”

“வில்லன் க்ரூப் எப்படி?”

“சத்யராஜை சொல்லலாம். ஆள்கிட்ட நெறைய சரக்கு இருக்கு. இருந்தாலும் இந்தப் படத்தில நீங்க சரியா யூஸ் பண்ணிக்கலேன்னுதான் தோணுது. தீபா வில்லியா நல்லா நடிச்சிருக்காங்க. டிவேட்டர்ல தீபாவுக்கு என்னா திட்டு விழுது! விஜயசக்கரவர்த்தி ஓ.கே.”

“ஸ்டண்ட் சீன் வெக்கச் சொல்லியிருக்கேன் என வட்டங்களுக்காக...”

“ஆமாங்க. அது ஒண்ணு சொல்லணும்னு நெனைச்சோம். ஏதோ அங்கங்கே ஏனோதானோன்னு அடிச்சிக்கிறாங்க. அது சரி. உங்க ப்ராண்ட் டான்ஸ் சீன் எதுவும் இல்லியே ஏன் சார்?”

“இருந்தா திட்டறே. இல்லன்னா ஏங்கறே. என்ன மேன் இது?”

“ஏங்கலே. அனுராதா, சில்க் டான்ஸாக்கெல்லாம் இப்ப மார்க்கெட் அவுட். அதனால நீங்க வெக்கலே. பெரிய ஆளு சார் நீங்க! ஆனாலும் படம் ஒண்ணும் மனசில நிக்கலே. லேகஸ் சப்ஜெக்ட் மாதிரி தோணுது. அவங்க ஸப்போர்ட் இருக்கும்னு எதிர்பார்க்கறீங்க? இந்தத் தடவை ஆடியன்ஸை நீங்க ரொம்ப நல்லா ஏமாத்திட்டீங்க சார். அடுத்த படத்திலே பார்ப்போம்.”

“டேக் இட் ஈஸி பாய்ஸ். இது இல்லேன்னா இன்னொண்ணு. ஓ.கே. வெச்சிடட்டுமா? டயமாகுது.”

டொடக்.

— ஜெயமன்மதன்

அண்ணி



# சிராபுஞ்சியில் அடைமழைக் காலத்திலும் கசியாமல், ஒழுகாமல் பாதுகாப்பு தரும் கூரைத் தகடு எது?





எப்போதும் மழை பெய்யும்
சிராபுஞ்சி உட்பட நாடெங்
கிலும் மழைக் காலத்தில்
முழுப் பாதுகாப்பு
அளிப்பவை என்று புகழ்
பெற்றவை ராம்கோ
அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் தகடுகள்.

ராம்கோ அஸ்பெஸ்
டாஸ் சிமெண்ட் தகடு
கள் ஆயுளுக்கும்
உழைக்கும் வண்ணம் வலு
வாக உருவாக்கப்படு
கின்றன. சிறந்த மூலப்
பொருட்களைத் தேர்ந்தெடுப்
பதில் கண்காணிப்பு; உற்பத்
தியில் நவீனத் தொழில் நுட்
பம்; திட்டமிட்ட தரக் கட்டுப்
பாடு- இவற்றின் இணைப்பே
ராம்கோ அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் தகடுகளின்
சிறப்பு.

எனவேதான் ராம்கோ அஸ்
பெஸ்டாஸ் சிமெண்ட் தகடு
கள் எப்படிப்பட்ட பருவநிலை
களையும் எதிர்கொண்டு,
காலத்தை வென்று நிலைத்து
நிற்கின்றன. எனவே கூரைத்
தகடுகளில் ராம்கோவின்
புகழ் கொடிகட்டிப் பறப்பதி
லும் தலைசிறந்த கட்டிடக்
கலை நிபுணர்களும் பொறி
யாளர்களும் அதையே
தேர்ந்தெடுப்பதிலும்
வியப்பதற்கு எதுவுமில்லை.



**Ramco**

ராம்கோ, அதுவே கடுமையான
மழையிலும் கசிவோ ஒழுகலோ
ஏற்படாத வண்ணம் தயாரிக்கப்பட்டு,
சோதிக்கப்பட்டு வழங்கப்படுகின்றது.

ராம்கோ அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட்
தகடுகளும் மற்ற உபகரணங்களும்—
தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல
நிரந்தரமான பாதுகாப்புக்கும் கூட.



**சதர்ன்
அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் லிமிடெட்**
739, அண்ணாசாலை,
சென்னை-600 002.
போன்: 82006

பரிபூரண
விற்பனையாளர்கள்:
ராஜா சாரிடி டிரஸ்ட்

அலுவலகங்கள்:
பெங்களூர் • எர்ணாகுளம்
• ஹைதராபாத் • பூனா
• விஜயவாடா
• விசாகப்பட்டினம்

தொழிற்சாலைகள்:
அரக்கோணம் (தமிழ்நாடு)
கரூர் (கர்நாடகம்)

பிரஷர் பைப் பிரிவு:
மக்சி (மத்தியப் பிரதேசம்)

CAS/SACL/25/85-C/TAM

# பேசும் கார்ட்டூன் சித்திரமே!

கி.ராஜேந்திரன்

சென்னை மண்ணடி புதுத் தெருவில் ஒரு வீட்டில்தீபக் என்றபூனை பேசுகிறது! "பேசும் பூனை" என்ற தலைப்பில் புகைப்படத்துடன் ஏக அமர்க்களமாக அதைப் பற்றின விவரங்களைப் பிரசுரித்துள்ளது தினமணி.

பூனை பேசுவதில் என்ன அதிசயம் என்று எனக்குப் புரியவில்லை. என்னிடம் ஒரு கார்ட்டூன் சித்திரமே பேசி இருக்கும் போது பூனை அதன் எஜமானிடம் பேசுவதில் என்ன வியப்பு? இதோ அந்தக் கார்ட்டூனை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். இதுவும் தினமணி பத்திரிகையில் இடம் பெற்றது தான் — ஒரு விளம்பரமாக. சென்னைப் பெரு நகர் குடிநீர் வாரியம் தனது புகார் பிரிவைத் தொடங்கி வைத்து இந்த விளம்பரத்தைத் தந்திருக்கிறது. அதிலுள்ள கார்ட்டூன் சித்திரத்தைப் பார்த்த உடனே அதனுடன் பேச வேண்டும் போல் இருந்தது எனக்கு.

"நான் தயார்" என்றது ஒரு குரல்.

திடுக்கிட்டு ஆச்சர்யத்துடன் பார்த்தேன்.

"என்ன, குழாயிலே தண்ணீர் கொட்டக் கண்டவன் போல் வாயைப் பிளக்கிறாய், நான்தான் கார்ட்டூன் சித்திரம் பேசுகிறேன்" என்றது குரல்.

அந்த அதிகார தோரணையானது பேசுவது அதிகாரிதான் என்பதை எனக்கு உணர்த்தியது.

"நீங்கள் ஏன் ஏதோ புதிராக முகத்தை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"இது தெரியலையா? இந்த விளம்பரத்தை நம்பி இந்த ஆசாமி எதிரே வந்து நிற்கிறானே என்றுதான்."

"நீயும் ஏனப்பா புதிராக முகத்தை வைத்துக் கொண்டிருக்கிறாய்? தண்ணீர் வரவில்லை என்று புகார் பண்ண வருபவன் கோபமாக அல்லவா வர வேண்டும்" என்று பொது ஜன வடிவ கார்ட்டூனைக் கேட்டேன்.

"இது தெரியலையா? இப்படி குடிநீர் — வடிகால் வாரியம் ஒரு புகார் பிரிவை ஆரம்பித்

சென்னை குடிநீர்...
பிரச்சனையா?
தொடர்பு கொள்க....
தொலைபேசி: 847176



**பின் அட்டை:**

அமெரிக்காவில் நடக்கும்
இந்தியக் கலைவிழாவில்
இடம் பெற்றுள்ள கலைப்
பொக்கிஷங்களுள் ஒன்று.

இருப்பதே எனக்குப் புதிராக இருக்கிறது. அதனால்தான். எதுக்குய்யா இப்படி என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கிறீங்கன்னு கேட்கிறேன்"என்றார் திரு. பொதுஜனம்.

"இவர் எதுக்கு ஃபோன் பண்ணாம நேரிலே வரார் அதுவே எனக்குப் புதிர்"என்றார் அதிகாரி.

"ஏங்க,.. எல்லார்கிட்டேயும் ஃபோனா இருக்கு?"

"பப்ளிக் ஃபோன்லேருந்து பண்றது."

"அதுக்குப் போடச் சில்லறை கிடைச்சாலும் லைன் கிடைக்கணுமே 84-ல் தொடங்கும் லைன் கிடைக்காதுன்னு தெரிஞ்சுதானே இந்த வட்டாரத்திலே புகார் பிரிவு ஆரம்பிச்சிருக்கீங்க?"

"லைன் கிடைக்கலேன்னு ஃபோன் டிபார்ட்மெண்ட்டுக்கும் போய் புகார் பண்ணுங்க. இங்கே குடிநீர் பற்றின புகார்தான் கேட்டுக்குவோம்."

**"குடிநீர் பற்றின புகார் பண்ணத்தான் லைன் கிடைக்கலேன்னு சொல்றேன்."**

"அது ஆபீஸ் நேரத்திலேதானே. அப்பத்தான் லைன் ரொம்ப பிஸியா இருக்கும். போட்ட நெம்பர் கிடைக்காது. நாங்கதான் காலை 7.30 முதல் மாலை 7 மணி வரை கடைவிரிச்சு வைச்சிருக்கிறதா விளம்பரத்தில் போட்டிருக்கமே!"

"அடுத்த வரியிலேயே நேரில் வந்தும் புகார் கொடுக்கலாம்னு போட்டிருக்கீங்களே."

"தொலைபேசியில் தெரிவிக்கலாம் அல்லது நேரில் வரலாம்னுதானே போட்டிருக்கோம். ஆக, முதல்லே தொலைபேசியில் புகார் கொடுக்க முயன்று முடியாமல் போனாத்தானே நேரில் வரணும்?"

"நான் ஃபோன் பண்ணிப் பார்த்து லைன் கிடைக்காம நேரில் வந்திருக்கிறதா நினைச்சுக்கறது."

"அதெப்படி நினைக்கிறது. குழாயிலே தண்ணியே வரலையே!"

"உங்க வீட்டிலேயுமா?"

"என் வீடு என்ன அமைச்சர் வீடா? நான் சாதாரண அதிகாரிதானே. நானும்தான் புகார் பண்ணனும்."

"ஃபோனிலா, நேரிலா?"

நான் பொறுமை இழந்து இடையில் புகுந்தேன். "சுற்றி வளைக்காதீங்க, விஷயத்துக்கு வாங்க"என்றேன்.

"குழாய்லே தண்ணி வரலை அதுதான் விஷயம்"என்றார் திரு பொதுஜனம்.

"உங்க வீட்டுக்குள்ளாற வர பைப் லைன்ல அடைப்பு இருக்கும். செக் பண்ணு"என்றார் அதிகாரி.

"நீங்களே வந்து பாருங்க!"

"உங்க வீட்டுக்குள்ளாற இருக்கிற பைப் லைனை நாங்க எப்படி செக் பண்ண முடியும்? சாலையோடு எங்கள் பணி சரி. வீட்டுக்குள்ளாற வர பைப் லைன்ல சேறு சகதி அடைச்சுக்கிட்டிருந்தா அது உங்க தலை விதி. அதைக் கவனிக்காம எங்களைக் கூப்பிடறீங்க."

"நான் புகார் பண்ண வந்தா பதிலுக்கு நீங்க புகார் பண்ணறீங்களே?"

"இந்தாய்யா இது புகார் பிரிவு உங்க மேலே புகார் பண்ணவும் எங்களுக்கு உரிமை உண்டு."

"எங்க வீட்டுக்குள்ளாற இருக்கிற பைப் லைன்லே சேறு சகதி அடைப்புன்னா அது சாலையிலே நீங்க தோண்டிப் பழுது பார்க்கும் போது அனுப்பி வைச்சதாகத்தான் இருக்கும்."

"**இருக்கலாம். ஆனா இப்ப அடைப்பு இருக்**கிறது உன் வீட்டுக்குள்ளாற வர்ற பைப் லைன்லதானே?"

"அது எப்படி அவ்வளவு உறுதியா சொல்றீங்க?"

"நீ போயி உன் வீட்டுக்குள்ளாற இருக்கிற **பைப் லைனைத் தோண்டிப் பார்த்து அதிலே** அடைப்பு ஏதும் இல்லேன்னு உறுதியா சொல்ற வரை நான் சொல்றதுதான் உறுதி."

"ஐயோ! ஏகமா செலவு வைக்கறீங்களே!"

"செலவுக்குப் பயந்தா முடியுமா? உனக்குத் தண்ணீர்கிடைக்கணும்கிறதுக்காக தெலுங்கு கங்கா திட்டத்துக்கு எத்தனை கோடி செலவாகுது! தெலுங்கு கங்கை வரட்டும் சொல்றேன். அழுத்தம் தாங்காம எல்லா பைப் லைனும் புட்டுக்கப் போகுது! புகார் புகார்னு அம்புட்டு ஜனங்களும் இங்க திருவிழா கணக்கா கூட்டமா மொய்க்கப் போறாங்க! ஃபோன் அலறிக்கிட்டே இருக்கும்."

"ஐயோ பாவம் உங்க பாடு ரொம்ப அவஸ்தைதான்"என்றார் திரு. பொதுஜனம்.

"நான் ஏன்யா அவஸ்தைப்படப் போறேன்? தெலுங்கு கங்கா எப்ப வருதோ? நான் அதுக்குள்ளாற ரிடையர் ஆகி எட்டு வருஷமாயிருக்கும்."

**டிம்பு முனிமைச் சந்தித்ததிலிருந்து ராஜேஷ்கன்னா ரொம்ப சந்தோஷமாய் இருக்கிறார். இருவரும் சேர்ந்து வாழ்கிறார்கள்.**

**"கல்யாணம்?"**

**"செய்து கொள்வோம். டைவோர்ஸ் கிடைப்பதற்காகக் காத்திருக்கிறேன்" என்கிறார் ராஜேஷ்.**

**ராஜேஷுக்கு இப்போது இருக்கும் ஒரே ஒரு கவலை தன் இரு பெண்களையும் டிம்பின் நல்லபடியாக வளர்த்து வர வேண்டுமே என்பதுதான்!**

**—ஸண்டே.**



"ஆமாமாம். இப்பத்தான் ஹெக்டே ஒத்துக் கிட்டிருக்காரு. இன்னும் சிவாஜிராவ் சரி சொல்லலே. அப்புறம் ராஜீவ் தலையாட்ட ணும். என். டி. ஆர். மனசு வைக்கணும், எம். ஜி. ஆர். பாக்கி பணத்தை எண்ணி வைக்கணும்..."

"சரி சரி விஷயத்துக்கு வாங்க" என்று மறுபடி அவர்களுக்கு நினைவூட்டினேன்.

"விஷயமென்ன விஷயம். புழலேரியில் தண்ணி இருந்தா இவர் வீட்டுக்கும் தண்ணி வரும். மழைக்காலம் வரட்டும் சொல்றேன்.. பக்கெட் பம்பைத் தொட்டாப் போதும் தண்ணி கொட்டும்!"

"அதுக்கு ரொம்ப நாள் பாக்கி இருக்குங் களே!"

"அது எங்களுக்குத் தெரியாதாக்கும். தெரிஞ்சுதானே ஐயா முதல்வர் விமானம் வாங்கி வைச்சிருக்காரு! அதிலே ஹெரண்டர் சன் துரை தினம் நாலு தடவை பெட்ரோலைத் தண்ணியா செலவழிச்சு சுத்தராரு! மேகங் களைத் தேடி அலையராரு! மழை மேகங்கள் மட்டும் அவர்கிட்ட சிக்கட்டும் விதை தெளிச் சுடுவாரு! மழை கொட்டும்!"

"அப்பப்ப தூற்றல் போடுதுங்க."

"சொல்லுய்யா, சொல்லு! அழுத்தமா சொல்லு. செயற்கை மழைக்குப் பணம் விரய மாகுதுன்னு புகார் பண்ணறவங்க முகத்துல கரி பூசற மாதிரி சொல்லு!"

"பெட்ரோலும் வரிப் பணமும் தண்ணியா செலவாகுதுங்களே."

"நீ எந்தத் தண்ணீரைக் குறிப்பிடறே"என்றார் அதிகாரி கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே."மாலை மயங்கின அவருக்கு வேறு ஒரு மயக்கம் வரும். நிச்சயமா குடிநீர் வாரியம் அனுப்பற தண்ணியை தண்ணியா செல வழிக்க முடியாது நீ வேற ஏதோ தண்ணி பற்றிப் பேசறே."

"அந்தத் தண்ணிக்குத்தான் பஞ்சமே இல் லீங்களே. அதுபற்றி நான் ஏன் புகார் பண்ண வரப் போறேன்?"

"அதானே! மதுவிலக்கை அமுல்படுத்தறது தான் எம். ஜி. ஆரின் லட்சியம். அதை சொல்லிக்கிட்டே குடி!"

"அப்ப கிக் அதிகமா கிடைக்குங்களா?"

நான் அடியோடு பொறுமை இழந்து குறுக் கிட்டேன்."ஏன் ஸார் விஷயத்தைச் சட்டுப் புட்டுன்னு முடிக்காம இப்படி செக்குமாடு மாதிரி சுற்றிச் சுற்றி வர்றீங்க? உங்களுக்கு உதவுவதே எங்கள் பணின்னு வேற விளம் பரத்திலே போட்டிருக்கீங்க..."

"ஏன் ஸார் இவ்வளவு பேச்சு பேசியிருக் கேனே, இவர் கவனத்தைத் திசை திருப்பி யிருக்கேனே, இதெல்லாம் இவருக்கு ஆறுதல் இல்லையா? இவருடைய குடிநீர் கஷ்டத்துக்கு இது ஒரு வடிகால் இல்லையா? இப்படி ஆறு தல் அளித்து உதவுவது எங்கள் பணி இல் லையா?"என்று கேட்டார் அதிகாரி.

எனக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது."நீங்கள் இருவருமே பேசும் சக்தியை இழப்பீர்களாக"என்று சபித்து விட்டேன்!



"நீங்க ஆறு குழந்தைகளைப் பெத்தும் கூட இன்னும் ஏன் கு. க. ஆபரேஷன் செய்துக்காம இருக்கீங்க?"

"காந்தியோ நேருவோ பிறக்கக் கூடிய வாய்ப்பிருக்கும் போது அதுக்கு நான் ஏன் தடையா இருக்கணும்?"




அவன்: "நாலு நாள் லீவு கேட்டுத் தபாலில் நான் அனுப்பின லெட்டர் மானேஜருக்குக் கிடைக்கலே போலிருக்கு!"

இவன்: "எப்படி சொல்றே?"

அவன்: "சற்றுமுன் என்னிடம் வள்ளு விழுந்தார்... "ஏன்யா நாலு நாள் லேட்டுனு!"

—உ. ராஜாஜி.



"குறுக்கே சுவர் இருந்தாலும் அதன் வழியாக வெளிப்புற நடப்புக்களைக் காணக் கூடிய சாதனத்தைத் தமிழன் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே கண்டுபிடித்துச் சாதனை புரிந்திருக்கான்!"

"அப்படியா! என்ன சாதனம் அது?"

"ஜன்னல்!"



"ஏண்டா அழுகிறுய்?"

"என் மாமா ஐம்பதாயிரம் மதிப்புள்ள சொத்தை என் பேரில் எழுதி வைத்துவிட்டு இறந்து விட்டார்!"

"ஐயோ, பாவம்! மாமா இறந்தது வருத்தமாய்த்தான் இருக்கும்...!"

"உளருதே! இதேபோல் எனக்கு இன்னும் இரண்டு மாமா இல்லையே என்று வருத்தப்பட்டுத்தான் அழுகிறேன்!"

—ஜி. ஆர். ராஜேந்திரன்.



"ஆட்டோவுக்கு ஏன் மூணு சக்கரம் வச்சாங்க தெரியுமா?"

"தெரியாதே, ஏன்...?"

"இரண்டு சக்கரம் வச்சா ஸ்கூட்டர்னு சொல்லிடுவாங்க, நாலு சக்கரம் வைச்சா கார்னு சொல்லிடுவாங்க, அதனுலே தான்!"

—ஜெயின்சேகர்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க் அன்பளிப்பு!

## இலவசம்!

**இந்த தனிச்சிறப்பான ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க், 6 காலியான 200 கிரா. ஸன்ரைஸ் ரீஃபில் பேக்குகளிற்கு பதிலாகக் கிடைக்கும்.**

இப்போது, உங்களுக்குப் பிடித்தமான ஸன்ரைஸ் காப்பியை நீங்கள் எங்கே வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு போகலாம், அதற்கே உரிய அழகான ஸன்ரைஸ் ஃப்ளாஸ்கில்! நீங்கள் செய்யவேண்டியது—தெல்லாம் இவ்வளவே—6 காலியான 200 கிரா. ஸன்ரைஸ் ரீஃபில் பேக்குகளை சேர்த்து உங்களுடைய வணிகரிடம் கொடுக்கவும். ஒரு வாரத்திற்குள் அவருடைய கடையில் ஒரு ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க் உங்களுக்காகவே காத்துக் கொண்டிருக்கும். நீங்கள் அடுத்தமுறை போகும்போது அதைப் பெற்றுக் கொள்ளலாம். விஷயம் எத்தனை எளிமையானது, பார்த்தீர்களா! ஆகவே, இன்றே உங்களுடைய ரீஃபில் தொகுப்பை சேர்க்கத் தொடங்குங்கள்.






இந்த அன்பளிப்பு பின்பக்கம் ★ இருக்கும் பேக்குகளிற்கு மட்டுமே.




**Nestlé**
# ஸன்ரைஸ்
**இன்ஸ்டன்ட் காப்பி-சிகரி ப்ளெண்ட்**

முந்துங்கள்!
இந்த அன்பளிப்பு ஃப்ளாஸ்குகளின் சரக்கு தீரும்வரையே செல்லும்.

**அம்மாவின் அந்த முதல் காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.**

FSL-8682 Tam

